எண்ணலே - எண்ணத்தையுடையை, 'நீயே பேரெண் ணலேயே' கருஅ.

எண்மை - எளிமை, 'இக்குடிப் பிறந் தோர்க் கெண்மை காணுமென' சரு.

எதிர்ந்த - மாறுபட்ட, 'செய்வினைக்கெ திர்ந்த தெவ்வர்' சா.

எதிர்ந்து - ஏற்றுக்கொண்டு, 'புரவெதி ரந்து' ருச; 'போரெதிரந் தென்னை போர்க்களம் புகினே' அச; மாறுப ட்டு, 'கடுமான் கோதை துப்பெதி ரந் தெழுந்த' ருச; 'போரெதிர்ந்து' அஎ.

எந்திரம் - பொறி, 'இங்களு நுழையா வெந்திரப் படுபுழை' கஎஎ.

எந்தை - என்தலைவன், 'எந்தையொடு கிடந்தோரெம் புன்றலைப் புதல்வர்' கக

எம்மனோர் - எங்கள், 'எம்மனோர்க்கொ ருதலை கைம்முற்றல' ருரு.

எம்மோன் - எம்முடைய தலைவன், 'எம் மோன் ......... குறவர் பெருமகன்' கருஎ.

எய்த - அணுக, 'எய்த வந்தனம் யாம்' க0.

எய்ம்மான் - எய்ப்பன்றி, 'எயினர் தந்த வெய்ம்மா னெறிதசை' கஎஎ.

எய்யாதாகின்று - அறியாததாயிற்று, 'கிளத்த லெய்யா தாகின்றெஞ் சிறு செந் நாவே' கசஅ.

எயில் - பாண்டியநாட்டு ஊர்களுளொன்று, 'மன்னெயி லாந்தையும்' எக; மதில், 'எயிற்கதவு' ரு; 'ஆரெயில்பல தந்து' சா.

எயிற்றி - மறத்தி, 'கருங்க ணெயிற்றி' கருக.

எருக்கிய - அறைந்துகொண்ட, 'ஊழி னுருப்ப வெருக்கிய மகளிர்' உருஎ.

எருத்தம் - கழுத்தம், 'இகழ்பாடுவோ ரெருத்தமடங்க' சo.

எருத்து - கழுத்து, 'எருத்து வவ்விய புலிபோன்றனன்' ச.

எருவை - தலைவெளுத்து உடல் சிவந்திருக்கும்பருந்து; கழுகுமாம், 'விசும் பா டெருவை பசுந்தடி தடுப்ப' சுச.

எல் - பகற்பொழுது, 'எல்லடிப் படுத் த' கஎ0; விளக்கம், 'எல்லுப்பட வி ட்ட சுடுதீ' கக.

எல்லரி - சல்லியென்னும் வாத்தியம், 'எல்லரி தொடுமின்' கருஉ.

எல்லை - பகல், 'எல்லையு மிரவு மெண் ணாய்' எ.

எவ்வி - ஒருவேள், 'மாவே ளெவ்வி புனலம் புதவின் மிழலை' உச; இரும் பா ணொக்கற் றலைவன் பெரும்பூட் போரடு தானை யெவ்வி' உருரு.

எழில் - உயர்ச்சி, 'பகட்டெழின்மார்பு' கரு; பெருமை, 'அறுமருப் பெழிற் கலை' உரு.

எழிலிய - எழில்பெற்ற. 'அம்பகட்டெ ழிலிய செம்பொறி யாகத்து' சுஅ.

எழினி - ஒருவள்ளல், 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற் கூவிளங் கண் ணிக் கொடும்பூ ணெழினியும்' கருஅ; 'வையகம் புகழ்ந்த வயங்குவினை யொ ள்வாட் பொய்யா வெழினி' உரு0; இவனை எழினி அதியமானென்றும் கூறுவர்.

எழு - கணையமரம், 'காப்புடைய வெழு முருக்கி' கச; 'எழுவுறழ் திணிதோ ள்' ருக.

எள்ளிய - இகழ்ந்த, 'உள்ள மெள்ளிய மடவோன்' எரு.

எறிச்சிலூர் - இது கோனாட்டுள்ள ஊர் களுளொன்று, ருச, சுக, கசுஎ.

எறித்தல் - உறைத்தல், 'நாடுசுடு கமழ் புகை யெறித்த லானே' சா.

எறிதல் - அடித்தல், 'எறிகோ லஞ்சா வரவி னன்ன' அக.

எறிந்த - அறைந்த, 'விளங்குபொன் னறை நலங்கிளர் பலகை' கரு; க டைந்து செறிக்கப்பட்ட, 'யானை வா ன்மருப் பெறிந்த வெண்கடைக் கோ னிறை துலாம்' ருக.

எறிந்து - வெட்டி, 'எறிந்துகளம் படுத் த வேந்துவாள்' கக.

எறியா - முறித்து, 'களிறே - கதவெறி யாச் சிவந்து' ச.

எறுழ்முன்பு - மிக்கவலி, 'தோல்பெய ரிய வெறுழ்முன்பு' எ.

என்குவை - என்று வினவுவாய், 'இவ ன்வா ரென்குவையாயின்' கரு.

என்றூழ் - கோடை, 'வெண்கிடை யென்றூழ் வாடுவறல்' எரு; 'வளம ழை மாறிய வென்றூழ்க்காலை' கசுக.

என்னதூஉம் - சிறிதும், 'என்னதூஉங் கடிமரந் தடித லோம்பு' ருஎ.

என்னை - என்னிறைவன், 'அணங்கருங் கடுந்திறலென்னை' எஅ; 'நினையொ

டு வரூஉ மென்னேக்கு' உசுஉ.

எனவ - என்னுடையன சிலவார்த்தை, 'எனவ கேண்மதி' ௬௫.

## ஏ.

ஏணி - எல்லை, 'நளியிரு முந்நீ ரேணி யாக' ௬௫; 'முந்நீ ரேணி' ௧௬௭.

ஏத்தி - வாழ்த்தி, 'மூன்றுறை நுண்பல மணலினு மேத்தி' ௧௬௬.

ஏத்துகம் - புகழ்வோம், 'ஏத்துகம் பல வே' ௧0.

ஏதின்மாக்கள் - அயலோர், 'ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது' ௫௮.

ஏந்திய - ஓங்கிய, 'நிலனேந்திய விசும்பு' ௨.

ஏமம் - காவல், 'எல்லா வுயிர்க்கு மேம மாகிய' ௧; 'ஏம முரச மிழுமென முழங்க' ௯.

ஏமாந்த - ஆசைப்பட்ட, 'அருந்தேமாந்த நெஞ்சம்' ௧0௧.

ஏமாந்து - இன்புற்று, 'காமர் நெஞ்ச மேமாந் துவப்ப' ௧௬௮.

ஏமுற்று - இன்பமுற்று, 'ஏமுற்றுக் கழிந்த மள்ளர்க்கு' ௮௪.

ஏய்ப்ப - ஒப்ப, 'அலவிப் பாவை யாடு வனப் பேய்ப்ப' ௯௯.

ஏர்தல் - எழுதல், 'ஏர்தரு சுடரின்' ௧௫௫.

ஏறு - இடபம், 'ஊர்தி வால்வெள் ளேறே' ௧; இடி, 'அதிர்குர லேறொடு துளிசொரிந் தாங்கு' ௧௬0; எறிதல், 'பருந்தி னேறு குறித்து' ௪௯.

ஏறை - ஏறைக்கோன், 'பெருங்க ணேறைக்குத் தகுமே' ௧௫௭.

ஏனல் - தினை, 'ஏனல் காப்போர்' ௨௮.

## ஐ.

ஐயவி - வெண்சிறுகடுகு, 'ஐயவி புகைப்பவும்' ௬௮.

ஐயூர் - ஓரூர், ௨௧, ௫௧, ௨௨௮, ௯௧௪.

ஐவனம் - மலைநெல், 'ஐவனம் வித்தி' ௧௫௯.

## ஒ.

ஒக்கல் - சுற்றம், 'இல்லோ ரொக்கற் றலைவ' ௯௫.

ஒக்கலை - சுற்றத்தையுடையை, 'பெரும்புல் லென்ற விரும்பே ரொக்கலை' ௫௯.

ஒக்கூர் - ஓரூர், ௨௭௯.

ஒசிய - முறிய, 'இருதலை யொசிய வெற்றி' ௮0.

ஒடியா - இடையறுத, 'ஒடியா முறையின்' ௨௯.

ஒடுக்கம் - ஒடுங்கியநிலை, 'வல்வின் மறவ ரொடுக்கங் காணாய்' ௨௫௯.

ஒடுங்கா - மடியாத, 'ஒடுங்கா வுள்ளத்து' ௮.

ஒண்மை - விளக்கம், 'ஒள்ளழல்' ௧௧.

ஒத்தி - ஒப்பை, 'யாங்கன மொத்தியோ' ௮.

ஒதுக்கு - இயங்குதல், 'ஒதுக்கின் றிணி மணற் புதுப்பூம் பள்ளி' ௯௯; நடை, 'தகைமெல் லொதுக்கின் வளைக்கை விறலி' ௧௯௫.

ஒதுங்கி - நடந்து, 'கோல்கா லாகக் குறும்பல் லொதுங்கி' ௧௫௯.

ஒப்ப - தக, 'ஒப்ப நாடி' ௧0.

ஒய்யென - விரைய, 'ஐயவிப் புகையுந் தாங்கா தொய்யென' ௯௮.

ஒரா - தப்பாத, 'நிலைக்கொரா அ விலக்கம்' ௪.

ஒரீஇ - தப்பி, 'கூருகிர்ப் பருந்தி னேறு குறித்தொரீஇ, ௪௯; நீங்கி, 'சிறுமனை வாழ்க்கையி னொரீஇ' ௨௯; 'பெருநல் யாணரி னொரீஇ' ௫௨; 'தென்புலங் காவலி னொரீஇ' ௭௧.

ஒருசார் - ஒருபக்கம், 'ஒருசா ரருவி யார்ப்ப' ௧௧௫.

ஒல்கல்-தளர்தல், 'ஒல்க லுள்ள மொடு' ௧௯௫.

ஒல்லாய் - உடம்படாய், 'பாசறை யல்லது நீயொல் லாயே' ௯௧.

ஒல்லான் - உடன்படான், 'ஈண்டவ ரடுதலு மொல்லான்' ௭௮.

ஒல்லையூர் - ஓரூர்; இது பெருஞ்சாத்த னுடையது, 'முல்லையும் பூத்தியோ வவ னொல்லையூர் நாட்டே' ௨௪௨.

ஒலிக்குந்து - தழைக்கும், உம் - உந்தாயிற்று, 'கழைக்கரும்பி னொலிக்குந்து' ௧௬௭.

ஒலித்தல்-தழைத்தல், 'ஒலிநெடும் பீலி' ௫0.

ஒலிபு - தழைத்து, 'தோடொலிபு நந்தி' ௧௨0.

ஒலிமென்கூந்தல் - தழைத்த மெல்லிய கூந்தல், ௧௪௬.

ஒலியல் - தழைத்தல், 'ஒலியற் கண்ணி' ௨0௧.

ஒலியற்கண்ணி - தளிர்மாலை, ௨0௨.
ஒலியன்மாலை - வளையமாலை, 'ஒலியன் மாலையொடு பொலியச் சூடி' ௭௬.
ஒழிய - சாக, 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' ௨.
ஒழுக - நடக்க, 'வையங் காவலர் வழிமொழிந் தொழுக' ௮.
ஒழுகை - வண்டி, 'உப்பொ யொழுகை' ௧௧௬.
ஒளித்தி - ஒளிப்பாய், 'மலைமறைந் தொளித்தி' ௮.
ஒளிர்வரூஉம் - விளங்கும், 'கண்ணொளிர் வரூஉங் கவின்சா பத்து' ௭.
ஒளிறுதல் - விளங்குதல், 'ஒளிறுவாண் மன்னர்' ௧௭௭.
ஒற்றி - சாய்த்து, 'திருந்தலை நோன் வெளில் வருந்த வொற்றி' ௬௪.
ஒற்றிய - வீழ்த்த, 'புலிபார்த் தொற்றிய களிற்றிரை பிழைப்பின்' ௨௱௭.
ஒறுத்தி - தண்டஞ்செய்வை, 'அத்தக வொறுத்தி' ௧0.
ஒன்றாது - பொருந்தாது, 'நிரயங் கொள்பவரோ டொன்றாது' ௫.
ஒன்றுபட்டு - ஒருபெற்றிப்பட்டு, 'ஒன்றுபட்டு வழிமொழிய' ௧௭.
ஒன்னோர் - பகைவர், 'இன்னாய் பெருமநின் னொன்னோர்க்கே' ௬௨.
ஒன்னார் - பகைவர், 'ஒன்னார் நாடுசுடு கமழ்புகை' ௬.

## ஓ.

ஓக்கிய - எடுக்கப்பட்ட, 'பொருநர்க் கோக்கிய வேலன்' ௬௬.
ஓங்கல் - உயர்தல், 'ஓங்கல் வெண்குடை' ௯.
ஓச்சி - எடுத்து, 'மதனுடை முழவுத்தோ ளோச்சி' ௫0.
ஓடை - யானை நெற்றிப்பட்டம், 'பொன்னோடைப் புகரணிநுதல்' ௯; 'ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு' ௧௨௬ ; 'நோன்பக டொளிதிக ழோடை பொலிய' ௧௬௧.
ஓப்புநர் - ஓட்டுவோர், 'நெல்லிளை கழனிப் படுபுள் ளோப்புநர்' ௨௬.
ஓம்பா - பாதுகாவாத, 'ஓம்பா வீகை' ௮.
ஓம்பாது - பாதுகாவாது, 'ஓம்பா தீயுமாற்ற லெங்கோ' ௨௨; 'ஓம்பாது கடந்தட்டு' ௪0.
ஓம்புற்ற - பாதுகாத்த, 'பிறரோம் புற்ற மன்னெயில்' ௪0.
ஓய்தல் - செலுத்துதல், 'உப்போ யொழுகை' ௧௧௬.
ஓர்க்கும் - செவிதாழ்த்துக் கேட்கும், 'இரும்புலிப் புகர்ப்போத் தோர்க்கும்' ௧௫௭.
ஓராங்கு - ஒருபெற்றிப்பட, 'ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே' ௧௬.
ஓரி - ஒருவள்ளல், 'கொல்லி யாண்ட வல்வி லோரியும்' ௧௫௮ ; இவனை வல்விலோரியென்றுங்கூறுவர். தேன் முதிர்ந்தாற்பரக்கும் நீலநிறம்; முசுக்கலையுமாம், 'அணிநிற வோரி பாய்தலின் மீதழிந்து - திணிநெடுங் குன்றந் தேன்சொரி யும்மே' ௧0௯.
ஓரியர் - சக்கரவாள சக்கரவர்த்திகள், விச்சாதரரும் நாகருமென்பர், 'விண்பொரு நெடுங்குடைக் கொடித்தேரோரியர்' ௧௫.
ஓரை - மகளிர்விளையாட்டு, 'ஓரை யாயத் தொண்டொடி மகளிர்' ௧௭௬.
ஓவாது - ஒழியாது, 'ஓவாது கூஉம்' ௪.

## க.

கங்கை - ஓராறு, 'மன்பதை யெல்லாஞ் சென்றுணக் கங்கைக், கரைபொரு மலிநீர் நிறைந்து தோன்றியாங்கு' ௧௬௧.
கசடு-அழுக்கு, 'கசடீண்டு காட்சி' ௨௧௪.
கசிந்து - இனபுற்று, 'மூதிற் பெண்டிர் கசிந்தழ' ௧௯.
கசிபு - இரங்கி, 'கசிபு கைதொழாஅ' ௨௬0.
கசிவு - இரக்கம், 'கண்பொறி போகிய கசிவொடு' ௧௬௧ ; வியர்ப்பு, 'கசிவுற்றவென் பல்கிளையொடு' ௧௬௬; 'பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை' ௧௬0.
கஞல-நெருங்க, 'புதுமலர் கஞல' ௧௪௭.
கட்கும் - களையும், 'ஆம்பலொடு கட்கும்' ௬௧.
கட்சி - காடு, 'கட்சி மஞ்ஞையின்' ௬0; சேக்கை, 'கட்சி காணாக் கடமா நல்லேறு' ௧௫௭; புகலிடம், 'கட்சி காணாக் கடமா நல்லேறு' ௨0௨.
கடந்து - அழித்து, 'வெப்புடைய வரண்கடந்து' ௧௧; எதிர்நின்றழித்து, 'ஓம்பாதுகடந்து' ௪0; எதிர்நின்று,

'ஆலங் கானத் தமர்கடந்து' உங; 'களமபுகு மல்லற் கடந்து' அ0; வஞ்சியாதெதிர்நின்று, 'கடந்தடு தானைச் சேர லாதனை' அ.
கடம்பு - ஒருமரம், 'கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்' உங.
கடவன் - கடப்பாடாகவுடையன், 'கடவன் பாரி கைவண் மையே' க0ரு.
கடறு - சுரம், 'இருங்கடறு வளைஇய குன்றம்' கஎ0; மலைச்சாரல், 'கடறு மணிகிளர' உ0உ.
கடன் - கிரியை, 'அந்தி யந்தண ரருங் கட னிறுக்கும்' உ; தென்புல வாழ் நாக் கருங்கட னிறுக்கும்' க.
கடாம் - யானைமதம், 'கமழ்கடாத்து... ......யானை' ந.
கடி-காவல், 'கடியுடை வியனகர்' கரு; விரைவு, 'எம்மம்பு கடிவிடுதும்' க; விளக்கம், 'அருங்கடிப் பெருங்காலை' ககரு.
கடிந்து-போக்கி, 'கொடிதுகடிந்து' கஎ.
கடிப்பு - முரசடிக்குங்குறுந்தடி, 'முரசுகடிப் பிகுப்பவும்' கரு அ.
கடுக்கும்-ஒக்கும், 'அவிரறல் கடுக்கும்' உரு.
கடுங்கண்ண - வன்கண்மையையுடைய, 'கடுங்கண்ண கொல்களிற்றால்' கச.
கடுங்கள்-அழன்றகள், 'இன்கடுங் கள்ளி னுழூர்' அ0.
கடுப்ப - ஒப்ப, 'உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்' கூ0.
கடும்பகல் - விளங்கியபகற்பொழுது.
கடும்பசி - மிக்கபசி, 'கடுமபசி கலக்கிய விடும்பைகூர் நெஞ்சமொடு' உங0.
கடும்பு - சுற்றம், 'சேர்ந்தவர்கடும்பார்த்தும்' உஉ; 'உடும்புரித்தன்னவென் பெழுமருங்கிற்கடும்பின்' சுஅ.
கடுமானகோதை - சேரமான்குட்டுவன் கோதை, 'கவிகைவண்மைக்கடுமான் கோதை' ருச.
கடுவளி - பெருங்காற்று, 'கடுவளிதொகுப்ப வீண்டிய' ருரு.
கடைஇ - முடுகி, 'கூழுஞ்சோறுங்கடைஇ' கரு0.
கடைஇய-செலுத்திய, 'களிறுகடைஇய தாள்' எ.
கண் - அசைநிலை, 'மீன்கணற்று' க0க; கரும்பின்கண், 'ஆடுகட் கரும்பின் வெண்பூ' நரு.
கண்ட - மனத்தான் ஆராய்ந்தறுதியிடப் பட்ட, 'நீமெய்கண்ட தீமைகாணின்' க0.
கண்டன்று - கண்டது, 'வாழக் கண்டன்று மிலமே' சுக.
கண்டிகும் - கண்டேம், 'மன்னைற்கண்டிகும்' உருக.
கண்டிசின் - கண்டேன், 'இனிது கண்டிசிற் பெரும' உஉ.
கண்டீரக்கோன் - கண்டீரக்கோப்பெருநள்ளி, 'வண்புகழ்க் கண்டீரக்கோ னாதலின்' கருக.
கண்டுயின்று - கண்மறைந்து, 'நூல்விரித்தன்ன கதுப்பினள் கண்டுயின்று' கருக.
கண்ணி - தலைமேற்சூடப்படுமாலை, 'கண்ணி கார்நறுங் கொன்றை' க; மாலை, 'மெல்லிணர்க்கண்ணி மிலைந்தமைந்தர்' உச.
கண்ணுறை - மேலீடு, 'புதுநெல் வெண்சோற்றுக் கண்ணுறை யாக' சுக; மேலேதூவுவது, 'அடகின் கண்ணுறை யாக யாஞ்சில அரிசி வேண்டினே மாக' கச0.
கண்ணேடிய-இரங்கிய, 'கூறுக் கண்ணேடிய வெருவரு பறந்தலை' கக.
கணிச்சி - ஓர் ஆயுதம்; குந்தாலியென்றும் மழுவென்றுஞ்சொல்லுவர்; 'மருநதில் கணிச்சி வருந்த வட்டித்து' சஉ; மழுவாயுதம், 'மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்' ருசு; 'கணிச்சிக் கூர்ம்படைக் கடுந்திற லொருவன்' ககரு.
கணை - அம்பு, 'வெ்கணை யிழித்த பகட்டெழின் மார்பின்' கங.
கதம் - சினம், 'கதநாய் வேட்டுவன்' நங.
கதழும் - ஓடும், 'கடிய கதழு நெடுவரைப் படப்பை' உ0உ.
கதிர் - கிரணம், 'பகல்விளங் குதியாற் பல்கதிர் விரித்தே' அ; சுடர், 'தண் கதிர் மதியம்,' 'ஒண்கதிர் ஞாயிறு' சு.
கதூஉம் - கவரும், 'பூக்கதூஉ மினவாளை' கஅ; 'சுடர்நிழற் கதூஉங் கடுமுரண் முதலை' நஎ.
கந்தம் - தூணம், 'கலிகெழு கடவுள் கந்தங் கைவிட' ருஉ.
கந்தாரம் - மது, 'தெறிப்ப விளைந்த தீங் கந் தாரம்' உருஅ.

**கந்து** - கம்பம், 'கந்துமுனிந் துயிர்க்கும் யானை' ௧௭௮ ; 'களிறு - கந்து சேர்பு நிலைஇ வழங்க' ௨௨ ; தறி, 'நெடுநல் யானைக்குக் கந்தாற் றாவே' ௫௭ ; பற்றுக்கோடு, 'மறங்கந் தாக நல்லமர் வீழ்ந்த நீள்கழன் மறவர்' ௯௩ ; 'நட்புக் கந்தாக' ௨௧௭.

**கபிலர்** - சங்கப்புலவருளொருவர் ; இவர் அந்தணர்; 'புலனழுக் கற்ற வந்தணாளன், இரந்துசென் மாக்கட் கினியிட னின்றிப், பரந்திசை நிற்கப் பாடினன்' ௧௨௬ ; 'பொய்யா நாவிற் கபிலன் பாடிய, மையணி நெடுவரை' ௧௭௪.

**கம்பலை** - ஆரவாரம், 'அழுவிளிக்கம்பலை' ௭.

**கமழ** - பரக்க, 'வியலிடங் கமழ விவணிசை யுடையோர்க்கு' ௫௦.

**கயம்** - நீர்நிறைந்தபள்ளம், 'கயத்திட்ட வித்து' ௧௩௭.

**கரக்கினும்** - மறைக்கினும், 'தன்னுணடக்கிக் கரக்கினுங் காக்கும்' ௧.

**கரகம்** - குண்டிகை, 'நீரற வறியாக் கரகத்து' ௧.

**கரப்பு** - மறைத்தல், 'கரப்பி லுள்ளமொடு' ௩௪.

**கராம்** - முதலை, 'ஏர்ப்புடைக் கராஅத் தன்ன வெண்ணினை' ௧௦௪ ; முதலையுள் ஒருசாதி, 'கராஅங் கலித்த குண்டுகண் ணகழி' ௩௭.

**கரிகால்வளவன்** - ஒருசோழன், 'களியியல் யானைக் கரிகால் வளவ' ௬௬.

**கரு** - கருப்பம், 'மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்' ௩௪ ; முட்டை, 'புறவுக் கருவன்ன புன்புல வரகு' ௩௪.

**கரும்பனூர்** - ஓரூர், ௩௮௪.

**கருமை** - வலிமை, 'கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி' ௩ ; 'கருங்கைக் கொல்லன்' ௨௧.

**கருவி** - தொகுதி, 'கருவி வானம்' ௧௫௩.

**கருவூர்** - இது சேரர்களுடைய இராசதானிகளுளொன்று ; இது வஞ்சியெனவும் வழங்கும், ௧௧, ௧௩, ௩௨, ௩௬, ௭௮, ௧௬௮, ௨௧௩.

**கலக்குற்றன்று** - கலக்கமுற்றது, 'பெருங்கலக் குற்றன்றால்' ௪௧.

**கலப்பை** - மூட்டுக்கள் ; யாழுமாம், 'காவினெங் கலனே சுருக்கினெங் கலப்பை' ௨௦௬.

**கலம்** - ஆபரணம், 'செய்வுறு நன்கலம்' ௬ ; குப்பி, 'யவனர் - நன்கலந் தந்த தண்கமழ் தேறல்' ௫௬.

**கலவம்** - மயிற்பீலி, 'கலவ மஞ்ஞை யிற் காண்வர வியலி' ௧௩௩.

**கலாம்** - போர், 'புலாற்களஞ் செய்த கலாஅத் தானையன்' ௬௯.

**கலாவ** - கலக்க, 'தண்சிதர் கலாவப் பெய்யினும்' ௧௦௫.

**கலி** - ஓசை, 'கலிகெழு கடவுள்' ௫௨ ; செருக்கு, 'வெள்ளுளைக் கலிமான்' ௧௫ ; 'கலிமான் வளவ' ௩௯ , 'கதழ் பரிய கலிமாவும்' ௫௫ ; தழைத்தல, 'கலிகொள் யாணர் வெண்மணிப் பறந்தலை' ௬௬.

**கலிச்சும்மை** - மிக்க ஆரவாரம், 'கலிச் சும்மை வியலாங்கண்' ௨௨.

**கலித்த** - செருக்கிய, 'கராஅங் கலித்த' ௩௭ ; தழைத்த, 'தூவற் கலித்த தேம்பாய் புன்னை' ௨௪ ; மிக்க, 'மானினங் கலித்த மலை' ௧௩௮.

**கலுழ்ந்து** - கலங்கி, 'உணகண் - கலுழ்ந்துவா ரரிப்பனி' ௧௪௪.

**கவ்வை** - எள்ளிளங்காய், 'கவ்வை கறுப்ப' ௧௨௦.

**கவசம்** - மெய்புகு கருவி, 'புலிநிறக் கவசம்' ௧௩.

**கவர்பு** - கவர்த்து, 'அந்தண் காவிரி வந்துகவர் பூட்ட' ௩௫ ; கவர்ந்து, 'விளைவயல் கவர்பூட்டி' ௧௬.

**கவலை** - கவர்தவழி, 'துன்னருங் கவலை' ௩.

**கவான்** - மலைப்பக்கம், 'விறல்வரைக் கவான்' ௧௫௧.

**கவிகண்ணோக்கு** - கையாற்கவிக்கப்பட்ட கண்ணாற்குறித்துப்பார்க்கும்பார்வை, 'கவிகண் ணோக்கின் ......... ஆடவர்' ௩.

**கவிகுளம்பு** - கவிந்தகுளம்பு, 'வெள்ளுளைக்கலிமான் கவிகுளம் புகள' ௧௫.

**கவிகை** - இடக்கவிந்தகை, 'கவிகை வண்மைக் - கடுமான் கோதை' ௫௪.

**கவினிய** - அழகுபெற்ற, 'ஆசினி கவினிய பலவின்' ௧௫௮.

**கவினை** - ஒளியையுடையாய், 'செஞ்ஞாயிற்றுக் கவினை' ௪.

கவுள் - கன்னம், 'களிறுகவு ளடுத்த வெ றிகல்' ௬௦.
கவைஇய-அகத்திட்ட, 'ஆரங் கவைஇய மார்பே' ௧௬.
கவைமுள் - வேலமுள், 'கவைமுள்ளிற் புழையடைப்பவும்' ௬௮.
கழங்கு - கழற்சிக்காய், 'மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ௬௯.
கழல் - ஒருகொடி, 'கழற்கனிவகுத்த' ௬௭; வீரகண்டை, 'தாள் - களங்கொளக் கழல்பறைந்தன' ௪.
கழனி - வயல், 'கழனி யுழவர்' ௧௬.
கழாத்தலை - கழாத்தலையாரென்னும் சங்கப்புலவர்; 'நும்போ லறிவி னுமருளொருவன், புகழ்ந்த செய்யுட் கழாஅத் தலையை, யிகழ்ந்ததன் பயனே' ௨௦௨.
கழால் - கழுவுதல், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' ௬௪; களைதல், 'களைகால் கழாலின்' ௧௨௦.
கழி - காம்பு, 'தோல் கழியொடு பிடிசெறிப்பவும்' ௬௮.
கழிப்பி - முடித்து, 'மூவேழ்துறையு முறையுளி கழிப்பி' ௧௫௨.
கழிய - இறப்ப, 'மாணிழை மகளிர் நாணினர் கழிய' ௭௮.
கழியும் - இறக்கும், 'ஆடுநர் கழியுமிவ் வுலகத்து' ௨௯.
கழுமிய - கலந்த, 'ஆத்தாக் கழுமிய துகளன்' ௨௫௮.
கழுவாய் - போக்கும்வழி, 'வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென' ௩௪.
கழூஉ - கழுவி, 'கழூஉவிளங் காரம்' ௧௧.
களம் - போர்க்களம், 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' ௨; யாகசாலை, 'யூப நட்ட வியன்களம் பலகொல்' ௧௫.
களரி - களர்நிலம், 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' ௨௨௫.
களிறு - ஆண்பன்றி, 'களிறுமேல் கொள்ளவும்' ௪௧; யானை, 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' ௯.
கறங்க - ஒலிப்ப, 'சிலைத்தார் முரசங் கறங்க' ௬௯.
கறி - மிளகுகொடி, 'கறிவள ரடுக்கத்து' ௧௬௮.
கறிக்கும் - தின்னும், 'மடப்பிணை...... வேளை வெண்பூக் கறிக்கும்' ௨௩.
கறுழ் - குதிரைமுகக்கருவி, 'மாவே,... கறுழ்பொருத செவ்வாயான்' ௪.
கறை - கறுப்பு, 'கறைமிடறு அணியலு மணிந்தன்று' ௧.
கறையடியானை - கறைபொருந்திய அடியினையுடைய யானை, ௬௮, ௧௬௫.
கன்மார் - கற்பார், 'இளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்' ௧௬௯.
கனலி - சூரியன், 'அலங்குகதிர்க் கனலி நால்வயிற் றோன்றினும்' ௬௫; 'வெங்கதிர்க் கனலி துறறவும்' ௪௧.
கனை - மிகுதி, 'கனையெரி யுரறிய மருங்கும்' ௨௩.

## கா.

கா - சோலை, 'கடிமரந் துளங்கிய காவும்' ௨௩; தோட்சுமை, ௧௦௩.
காண்கு - காணபேன், 'காண்கு வந்திசிற் பெரும' ௧௭; எந்தைசிற் காணகுவந் திசினே' ௧௨௫.
காணபு - காட்சி, 'கார்ப்பெய றலைஇய காண்பின காலை' ௧௧௬.
காப்பினை - காவலையுடையை, 'விறுப்புற வறியா வேமக் காப்பினை' ௨௦.
காப்பு - காவல், 'காப்புடைய வெழுமுருக்கி' ௧௪.
காமர் - அழகு, 'காமர் - வண்ண மார்பு' ௧.
காய்தல் - விடாய்த்தல், 'காய்தலு முண்டக் கள்வெய் யோனே' ௨௫௮.
காய - காவிய = சுமந்த, 'சுவலழுந்தப் பலகாய' ௧௩௬.
காயம் - ஆகாயம், 'வறிதுநிலைஇய காயமும்' ௨௦, ௩௦.
கார் - கார்காலம், 'கண்ணி கார்நறுங் கொன்றை' ௧.
காரியாறு - ஓராறு, ௪௭.
காரெனுக்கல் - புல்லென்றசுற்றம் 'காரெ னொக்கற் கடும்பசி யிரவல' ௧௪௧.
காரை - ஒருசெடி, 'முட்காற் காரை முதுபழன்' ௨௫௮.
காலம் - முடிவு, 'ஞாலங் காக்குங் கால முன்பின்' ௫௯.
காலமுன்ப - காலன்போலும் வலியையுடையோய், 'கால முன்பநிற் கண்டனென்' ௨௩.

காவல் - காக்கப்படுந்தேயம்; ஆகுபெயர், 'காவல் - குழவி கொள்பவரி னோம்புமதி' ரு.

காவலர் - காக்கும் அரசர், 'வையங் காவலர்' அ.

காவிரி - ஓருநதி, 'அந்தண் காவிரி வந்து கவர் பூட்ட' கூரு; 'மிக்குவரு மின்னீர்க் காவிரி' சகூ; 'நீயே தண்புனற் காவிரிக் கிழவனை' ருஅ; 'புனிறுதீர் குழவிக் கிலிற்றுமுலை போலச், சுரந்த காவிரி மரங்கொன் மலிநீர்' சுஅ; 'பொன்படு நெடுவரைப் புயலேறு சிலைப்பிற், பூவிரி புதுநீர்க் காவிரி புரக்குந், தண்புனற் படப்பை' கசுசு; 'கரைபொருது, இரங்குபுனனெரிதரு மிகுபெருங் காவிரி, மல்லனன்னாட்டு' கஎச; 'கோடை யாயினுங் கோடி .... காவிரி புரக்கு நன்னாடு' கூகூ; 'முழங்குநீர்ப் படப்பைக் காவிரிக் கிழவன்' கூககூ.

காவிரிப்பூம்பட்டினம் - சோழநாட்டில் கடற்கரைக்கண் இருந்ததோர் பழையநகரம், ருஎ, ருஅ, கஎக, கூருகூ.

காழ் - கம்பம், 'வெளிறி னோன்காழ்ப் பணைநிலை முனைஇ' உகூ; காம்பு, 'கணைதிரள் னோன்காழ் திருத்தி' கூரு; நாராசம், 'கயத்துவாழ் யாமை காழ்கோத் தன்ன' எ0; முத்துவடம், 'மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்' கரு0; விதை, 'அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட - காழ்' உசுசு.

காழகம் - ஆடை, 'காழக நீப்பவும்' சக.

கான் - காடு, 'கானக நாடனை' ரு.

கானப்பேர் - காளையார்கோயில்; இது பல சிற்றரண்களையுடையதோர் பேரரண்; இதன்தலைவன் வேங்கைமார்பன்; இவனைவென்று இதனைக்கைக்கொண்டான் உக்கிரப் பெருவழுதி, 'அருங்குறும் புடுத்த கானப் பேரெயில், ......... வேங்கை மார்ப னிரங்க' உக; கூசுஎ.

கானல் - கடற்கரை, 'நிலவுமணல் வியன்கானல்' கவ; 'கானற் கழியுப்பு முகந்து' சு0.

## கி.

கிடப்பி - கிடத்தி, 'பசும்புற் பரப்பினர் கிடப்பி' கூகூ

கிடை - நெட்டி, 'அறுகய மருங்கிற் சிறுகோல் வெண்கிடை' எரு.

கிண்கிணி - சதங்கை, 'கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டு' எஎ.

கிணை - உடுக்கை, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' எ0; போர்ப்பறை, 'பாடின் றெண்கிணை கறங்க' எசு; தெணகிணை கறங்கச்சென் றாண்டட் டனனே' எஅ.

கிணைமகள் - விறலி, 'கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே' ககக.

கிணைமகன் - கிணையென்னும்பறையையுடையவன், 'இரும்பறைக் கிணைமகன்' கூஅஅ.

கிணைவன் - கிணைமகன், 'கொன்வரல் வாழ்க்கைநின் கிணைவன்' கூஎக.

கிழவோன் - உரித்தாந்தன்மையையுடையோன், 'விழுநீர் வேலி நாடுகிழவோனே' கூ.

கிழித்த - தின்ற, 'குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொடு' கூச.

கிள்ளி - ஏறுதி திருக்கிள்ளி, 'கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி' ககூஎ. சோழன்.

கிள்ளிவளவன் - சோழன் குளமுற்றத் துத்துஞ்சிய கிள்ளிவளவன், 'உருகெழு பசும்பூட் கிள்ளி வளவன்' சுக; 'கிள்ளி வளவ னல்லிசை யுள்ளி' எ0.

கிளை - இனம், 'கிளைபுகலத் தலைக்கூடியாங்கு' கஎ.

கிளைப்பின் - கிளறின், 'கேழ லுழுத விருஞ்சேறு கிளைப்பின்' கஎசு.

கிளையை - கிளைமையை யுடையோய், 'கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென' கசுச.

## கீ.

கீழ்மடை - கடைமடை, 'அரிநர் கீழ்மடைக் கொண்ட வாளையும்' சஉ.

கீள்வது - உடைவது, 'சிறுகுளங் கீள்வது மாதோ' ககஅ.

## கு.

குச்சு - குச்சுப்புல், 'குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்' உருஎ.

குட்டம் - ஆழம், 'இருமுந்நீர்க் குட்டமும்' உ0; 'நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து' உசுகூ.

குட்டுவன் - சோழியவேனாதி திருக்குட்டுவன், 'வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்' ௩௪௩.

குடக்கு - மேற்கு, 'வெண்டலைப் புணரிக் குடகடல்' ௨; 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்துக் குடக்கும்' ௬.

குடகமலை - மேற்றிசையின்கண்ணதோர் மலை, 'குடாஅது பொன்படு நெடுவரை' ௧௬௬.

குடர் - நரம்பு, 'அரிக்குட ரரியின் யாமை மிளிர' ௨௪௯.

குடவாயில் - ஓரூர், ௭௪, ௨௪௨.

குடவர் - குடநாட்டார், 'வரையா வீகைக் குடவர் கோவே' ௧௭.

குடாது - மேற்கின்கண்ணது, 'குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின குடக்கும்' ௬.

குடிஞை - பேராந்தை, 'கடுந்துடி குடிஞையோ டிரட்டும்' ௧௭௦.

குடுமி - பாண்டியன் பல்யாகசாலைமுதுகுடுமிப்பெருவழுதி, 'குடுமிக் கோமாற் கண்டு நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே' ௬௪.

குடுமித்து - முடியையுடைத்து, 'கொண்ட குடுமித்தித் தண்பணை நாடே' ௩௨.

குடை - பனையோலையாற்செய்யப்படும் ஒருவகை உண்கலம், 'இரும்பனங் குடையின் மிசையும்' ௧௭௭.

குண்டு - ஆழம், 'குண்டகழி' ௧௪; 'குண்டுசுனை' ௧௧௬.

குணக்கு - கிழக்கு.

குணாது - கிழக்கின்கண்ணது, 'குணாது கரைபொரு தொடுகடற் குணக்கும்' ௬.

குணில் - முரசடிக்கும் குறுந்தடி, 'குணில்பாய் முரசி னிரங்கு மருவி' ௧௪௩.

குதிரை - ஒருமலை, 'ஊரா தேந்திய குதிரைக் கூர்வேற், கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்' ௧௫௮; 'ஊராக் குதிரைக் கிழவ' ௧௬௮.

குப்பை - திரட்சி, 'குப்பை நெல்லின் முத்தூறு தந்த' ௨௪.

குமணன் - ஒருகொடையாளி, 'குன்றியுங் கொள்வல் கூர்வேற் குமண' ௧௫௯; 'நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன்' ௧௬௦; 'திருந்துவேற் குமணன்' ௧௬௩; 'நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண' ௧௬௪.

குமரி - கன்னியாறு, 'தெனாஅ துருகெழு குமரி' ௬; 'தென்குமரி' ௧௭; 'குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி' ௬௭.

குய் - தாளிப்பு, 'கமழ்குய் யடிசில்' ௧௦; 'சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்' ௧௨௭.

குரம்பை - சிறியமனை, 'குறியிறைக் குரம்பை' ௧௨௯.

குரல் - ஏழுநரம்பில் முதற்றானம், 'குரல்புணர்சீர்க் கொளைவலபாண் மகளும்' ௧௧; கதிர், 'மானணி பெருங்குர லனையன்' ௧௩௮; தோகை, 'பரூஉக்குரற் சிறுதினை' ௧௬௮.

குரவை - குரவைக்கூத்து, 'சினமாந்தர் வெறிக்குரவை - யோத நீரிற் பெயர்பு பொங்க' ௨௨.

குரிசில் - தலைவன், 'பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்' ௧௪.

குரீஇ - குருவி, 'குன்றத் திறுத்த குரீஇயினம்' ௧௯; 'தூக்கணங் குரீஇத் தூங்கு கூடேய்ப்ப' ௨௨௫.

குரும்பை - பனைநுங்கு, 'இரும்பனையின் குரும்பைநீரும்' ௨௪.

குரூஉ - கனம், 'பசுமட் குரூஉத்திரள் போல' ௩௨.

குலவு - வளைவு, 'குலவுச்சினைப் பூக்கொய்து' ௧௧.

குவவு - திரட்சி, 'ஓங்குமணற் குவவுத் தாழை' ௨௪.

குவளை - செங்கழுநீர், 'நீர்தரு மகளிர் குற்ற குவளையும்' ௪௨; 'குண்டுசுனைப் பூத்த குவளை' ௧௧௬. நீலம், 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' ௧௦௫.

குவை - குவிவு, 'குவையிருங் கூந்தல்' ௨௫.

குவைஇய - திரண்ட, 'கூர்வேற் குவைஇய மொய்ம்பின்' ௧௧௮.

குழவி - குழந்தை, 'தாயி றூவாக் குழவி போல்' ௪.

குழவிகொள்பவர் - குழந்தையை வளர்ப்போர், 'குழவி கொள்பவரி னோம்புமதி' ௫.

குழிசி - பானை, 'இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்ப' ௬௫.

குழீஇ - திரண்டு, 'கொண்மூ வேண்டு வயிற் குழீஇ' ௧௬௧.

குழை - தளிர், 'பொலங்குழை யுழிஞை' ௫௦.

குழைப்ப - தளிர்ப்ப, 'முளிபுற் கானங் குழைப்ப' கசுO.

குளவி - மலைமல்லிகை, 'அடைமல்கு குளவி' கூO ; 'கூதளங் கவினிய குளவி முன்றில்' கசுஅ.

குளிப்ப - மேல்விழுந்து உள்புக, 'கடற்படை குளிப்ப மண்டி' சு.

குற்ற - பறித்த. 'குற்ற குவளை' சஉ.

குற்றுதல் - குறுதல், 'குற்ருறு வுலக்கை' உஉ.

குறித்து - கருதி, 'நீரழுவ நிவப்புக் குறித்து' கச.

குறியெதிர்ப்பை - குறித்த எதிர்ப்பை, 'நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி' கசுகூ.

குறுகி - அணுகி, 'இடையின்று குறுகி' ருச.

குறுங்கோழியூர் - ஒரூர், கஎ, உO, உஉ.

குறுநணி - அணிமை, 'நம்முட் - குறுநணி காண்குவ தாக' உOகூ.

குறும்பறை - பேடை, 'உயர்நிலை மாடத்துக் குறும்பறை யசைஇ' சுஎ.

குறும்பு - அரண், 'குறும்பல் குறும்பிற் றதும்பவைகி' கஎஎ ; குறும்பர், 'குறும்படைந்த வரண்கடந்தவர்' கூஎ. சிற்றரண், 'குரூஉக்களிற்றுக் குறும்புடைத்தலின்' கூஎ.

குறுமகள் - மனைவி, 'மெல்லியற் குறுமக ளுள்ளிச் செல்வல்' ககூசு.

குறுமாக்கள் - சிறுபிள்ளைகள், 'ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாலின்' கூச.

குறை - முடிக்கப்படும்பொருள், 'பயக்குறை யில்லைத்தாம் வாழு நாளே' கஅஅ.

குன்றினும் - குறையினும், 'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்' கூரு.

குன்று - சிறுமலை, 'குன்றுமலை காடுநாடு' கஎ ; 'குன்றுதூ வெறியு மரவம் போல' உகக ; பக்கமலை, 'அம்மலை காக்கு மணிநெடுங் குன்றின்' கருO.

குன்றூர் - ஒரூர், கூகூஅ.

## கூ.

கூஉம் - கூப்பிடும், 'ஓவாது கூஉநின் னுடற்றியோர் நாடே' ச ; கூவும், 'சேவல்...... ஏனல் காப்போ ருணர்த்திய கூஉம்' உஅ.

கூகை - கோட்டான், 'வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி' உகூஅ.

கூடல் - மதுரை, 'தமிழ்கெழு கூடற் றண்கோல் வேந்தே' ருஅ.

கூடலூர் - ஒரூர், உஉகூ.

கூடு - நெற்கூடு, 'கூடு வியனகர்' கசஅ.

கூதளம் - கூதாளி, 'கூதளங் கவினிய குளவி முன்றில்' கசுஅ.

கூம்பு - பாய்மரம், 'கூம்பொடு மிசைப் பாய் களையாது' கூO.

கூர் - மிகுதி, 'கூரி லாண்மை' எரு.

கூழ் - சோறு, 'கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்' எO; பொருள், 'எத்தினர் தருஉங் கூழே' கஉஉ.

கூழை - பின்படை, 'கூழைதார் கொண்டு' அஅ ; மயிர், 'கொண்டைக் கூழைத் தண்டழைக் கடைசியர்' சுக.

கூளியர் - ஆறலைகள்வர், 'குரங்கன்ன புன் குறுங்கூளியர்' ககூசு ; மறவர், 'கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்' உகூ.

கூற்றம் - நாட்டின் ஒருபாகம், உச ; யமன், 'மருந்தில்கூற்றத்து' கூ.

கூற்று - யமன், 'உயிருண்ணுங் கூற்றுப் போன்றன' ச.

## கெ.

கெடிறு - ஒருவகைமீன், 'குரூஉக் கெடிற்ற குண்டகழி' கஅ.

கெடுவின்று - கெடுதலில்லாமல், 'கெடுவின்று.........அறநின்று நிலையிற்று' கூகூ.

## கே.

கேட்டிசின் - கேட்டேன், 'பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே' கருO.

கேட்பல் - கேட்பேன், 'கேட்ப லெந்தே' உஎ.

கேழ் - நிறம், 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றித ழலரின்' உஎ,

கேளலம் - கேட்டறியோம், 'இன்றினுங்கோ கேளலம்' எசு.

கேளிர் - சுற்றத்தார், 'வன்புலக் கேளிர்க்கு வருவிருந் தமரும்' சஉ.

கை - கோடாலியின்கை, 'நெடுங்கை நவியம்' கூசு ; செயல், 'மையன் மாலையாங் கையறு பினைய' சுஎ.

கைம்முற்றல - முடியா, 'கைம்முற் றலநின் புகழே' ருகூ.

கைம்மை - கைம்மைநோன்பு, 'ஒண்ணுதன் மகளிர் கைம்மை கூர' உரு.

கையறவு - மிடிமை, 'பிறர்கை யறவு தாஞ ணுதலும்' கரு௪.

கைவழி - யாழ், எப்பொழுதும் கைய கத்திருத்தலால் இப்பெயர்பெற்றது; 'கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி' கசக.

## கொ.

கொட்கும் - சூழவரும், 'காலுண வாகச் சுடரொடு கொட்கும்' சகூ.

கொடி - ஒழுங்கு, 'ஆய் கரும்பின் கொடிக்கூரை' உ௨; 'மீன்சுடு புகையின் புலவுநாறு நெடுங்கொடி' ருஉ; துவசம், 'கொல்களிற்று மீமிசைக் கொடிவிசும்பு நிழற்றும்' கூ.

கொடிஞ்சி - தேர்மொட்டு, 'நெடுந்தேர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்' எள.

கொடிது - தீத்தொழில், 'கொடிது கடிந்து கோறிருத்தி' கஎ.

கொடுத்தோய் - வழங்கினேய், 'பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்' உ.

கொடுமை - வளைவு, 'கொடுவிற் கூளியர' உகூ; 'கொடுங்கரைத் தெண்ணீர்ச் சிறுகுளம்' ககஅ.

கொடுவரி - புலி, பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை, ஆகுபெயருமாம், 'கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை' கரு௫.

கொண்கானம் - ஒருமலை, கரு௪, கரு௫, கருகூ.

கொண்டல் - கீழ்காற்று, 'கொண்டன் மாமழை' கூச.

கொண்டி - கொள்ளை, 'கொண்டியும் பெரிதெனை' எஅ; 'தண்டமிழ் வரைப்பகங் கொண்டி யாக' ககஅ; திறை, 'கொண்டி வேணடுவ ஞயிற் கொள்கென' ருக.

கொண்பெருங் கானத்துக் கிழவன் - கொண்கானங்கிழான், கருகூ.

கொண்பெருங்கானம் - கொண்கானமென்னுமலை, 'தண்பல விழிதரு மருவிச், கொண்பெருங் கானம் பாடலெனக் கெளிதே' கரு௪; 'விளங்குபுகழ்க் கொண்பெருங் கானத்துக் கிழவன்' கரு௫; 'இரண்டுகன் குடைத்தே கொண்பெருங் கானம்' கருகூ.

கொண்மார் - கொள்ளல்வேண்டி, 'ஒண்படைக் கடுந்தார் முன்புதலைக் கொண்மார்' கரு.

கொண்மென - கொண்மினெனச்சொல்லி, 'கொண்மெனச் - சாத்திடை நல்கி யோனே' கரு௨.

கொய்து - பறித்து, 'குலவுச்சினைப் பூக்கொய்து' கக.

கொல்லாது - கெடுக்காமல், 'பிறரெனக் குணங்கொல்லாது' ருரு.

கொல்லி - ஒருமலை, 'ஒங்கு கொல்லியோ ரடுபொருந' உ௨; 'ஒங்கிருங் கொல்லிப் பொருநனை' கரு௨; 'பிறங்குமிசைக் கொல்லி யாண்ட வல்வில் லோரியும்' கருஅ.

கொலைவன் - கொல்லுதலைச்செய்பவன், 'கொலைவன் யார்கொலோ' கரு௨.

கொழுநன் - தலைவன்.

கொழுமீன் - கொழுவியமீன், 'கழனியுழவர் சூட்டொடு தொகுக்குங் - கொழுமீன்' கூ.

கொள்கை - விரதம், 'ஆன்ற கேள்வி யடங்கிய கொள்கை' உசு.

கொள்ளார் - பகைவர், 'கொள்ளாரோட்டிய நள்ளியும்' கருஅ.

கொளீஇ - கொளுத்தி, 'பூநாற்றத்த புகைகொளீஇ' கச; ஒங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ருரு; பெய்து, 'புனற்குருதி யுலைக் கொளீஇ' உசு.

கொளை - பாட்டு, 'கொளைவல்பாண் மகனும்' கக.

கொற்றம் - வெற்றி, 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' உக.

கொற்றன் - பிட்டங்கொற்றன், 'வைவள் ளீகைக் கடுமான் கொற்ற' கசுஅ; 'திருந்துவேற் கொற்றன்' களக.

கொன்றோர் - சிதைத்தோர், 'ஒருவன்-செய்தி கொன்றோர்க்கு' கூச.

## கோ.

கோ - அரசன், 'ஆற்றலெங்கோ' உ௨.

கோடாது - வளையாமல், 'நமரெனக் கோல்கோடாது' ருரு.

கோடியர் - கூத்தர், 'விழவிற் கோடியர் நீர்மை போல' உக.

கோடு - கொம்பு, 'நுதிமழுங்கிய வெண் கோட்டான்' ச. சிகரம், 'பெருங்கோட் டிமயமும்' உ., பக்கம், 'கோ

முதிரன் கொண்மூ' ௯௫. புடை, 'கோடிய ரடிப்பு' ௧௬௪. யாழின் ஒருறுப்பு, 'கருங்கோட்டுச் சீறியாழ்' ௧௨௯; ௧௪௫.

கோடை - கடிய நெடுவேட்டுவன்மலை, 'வெள்வீ வேலிக் கோடைப் பொருந' ௨௦௫.

கோதை - சேரமான் கோக்கோதைமார்பன், 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮; 'யாங்கன மொழிகோ வோங்குவாட் கோதையை' ௪௯. சேரன், 'மாவள் வீகைக் கோதையும்' ௧௨௨. மாலை, 'கோதை மார்பிற் கோதை யானும்' ௪௮.

கோயில் - அரண்மனை, ௯௪.

கோல் - கோற்றொழில், 'வார்கோல் ......குறுந்தொடி மகளிர்' ௯௪.

கோவல் - கோவலூர்.

கோவலூர் - இது பெண்ணையாற்றின் கரையின் கண்ணதோர் நகரம்; இதன் தலைவர் மலையமான் திருமுக்காரி முதலியோர், இஃது ஒரு காலத்து அதியமான் நெடுமானஞ்சியால் வெல்லப்பட்டது; கோவலெனவும் வழங்கும், 'முரண்மிகு கோவலூர் நூறி நின், அரண்டு திகிரி யேந்திய தோளே' ௯௯.

கோவூர் - ஓரூர், ௯௧.

கோழி - உறையூர், 'கோழி - யுயர்நிலை மாடத்து' ௬௭; 'கோழி யோனே கோப்பெருஞ் சோழன்' ௨௧௨.

கோள் - குலை, 'செழுங்கோள் வாழை' ௧௬௮.

கோளி - பூவாது காய்க்கு மரம், 'முழுமுத றொலைந்த கோளி யாலத்து' ௫௮.

கோனாடு - இது சோழநாட்டின் உள் நாடுகளுளொன்று, ௫௪.

## கௌ.

கௌரியர் - பாண்டியர், 'தவிரா வீகைக் கௌரியர் மருக' ௩.

## சா.

சாஅய் - மெலிந்து, 'நல்கா மையி னைவரச் சாஅய்' ௧௪௬.

சாகாடு - உருள், 'அச்சுடைச் சாகாட் டாரம்' ௨௫௬. சகடம்-வண்டி, 'ஆரைச் சாகாட் டாழ்ச்சி போக்கும்' ௯௦; 'பகடுடைச் சாகாட் டாழ்ச்சி சொலிய' ௬௦; 'காவற் சாகா டுகைப்போன்' ௧௮௫; 'அச்சுடைச் சாகாட் டாரம் பொருந்திய - சிறுவெண் பல்லி' ௨௫௬.

சாத்தன் - ஒல்லையூர்கிழார்மகன் பெருஞ்சாத்தன், 'வல்வேற சாத்தன் மாய்ந்த பின்றை, முல்லையும் பூத்தியோவவ ஞெல்லையூர் நாட்டே' ௨௪௨; பாண்டியன் கீரஞ்சாத்தன், 'உண்மொ விரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்' ௧௭௮.

சாந்து - சந்தனம், 'பொலங்கழற்காற் புலர்சாந்தின்' ௩.

சாபம் - வில், 'சாப நோன்ஞாண்' ௧௪, 'குறுந்தொடி கழித்தகைச் சாபம பற்றி' ௭௦.

சாயலர் - இளைப்பையுடையார், 'உழையோர் தன்னினும் பெருஞ்சாயலரே' ௨௯௨.

சாயா - இளையாத, 'மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா' ௩.

சாயின்று - சாய்ந்தது, 'சாயின் றென்ப வாஅய் கோயில்' ௧௨௭.

சாரவு - புகலிடம், 'உறுநர் செலசார் வாகி' ௨௦௫.

சாறு - விழா, 'சாறுகொண்ட களம் போல' ௨௨; 'சாறுதலைக கொண்டென' ௮௨.

சான்ற - அமைந்த, 'பாடல் சான்ற விறல்வேந்தனும்' ௧௧.

சான்றோர் - நற்குணங்களாலமைந்தோர், 'சான்றோர் செய்த நன்றுண்டாயின்' ௩௪.

## சி.

சிதடன் - குருடன், 'துஞ்சுபுலி யிடறிய சிதடன் போல' ௭௩.

சிதடு - குருடு; இஃது எண்வகையெச்சத்துள் ஒன்று, 'சிறப்பில் சிதடு முறுப்பில் பிண்டமும்' ௨௮.

சிதர் - துளி, 'தண்சிதர் கலாவப் பெய்யினும்' ௧௦௫.

சிதலை - கறையான், 'நுண்பல் சிதலை யரிதுமுயன் றெடுத்த - செம்புற்று' ௫௧.

சிதார் - சீரை, 'வேற்றிழை நுழைந்த வேர்நனை சிதாஅர்' ௬௯; 'கூருகிர்ப் பருந்தி னிருஞ்சிறகன்ன - பாறிய சிதாரேன்' ௧௫௦.

சிதைய - அற, 'புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய' ௬௫; சிதற, 'தண்ணுன் பொருநை வெண்மணற் சிதைய' ௫௬.

சிமை - மலையுச்சி, 'ஆடுகழை நரலுஞ் சேட்சிமை' ௧௨௦.

சிலம்பு - மலை, 'குணில்பாய் முரசி னிரங்கு மருவி-நளியிருஞ் சிலம்பு' ௧௪௫.

சிலை - வில, 'சிலைத்தா ரகலம்' ௬௧.

சிலைக்கும் - கொட்டும், 'வலிதுரந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி' ௧௭௦.

சிலைத்து - ஒலித்து, 'சிலைத்தெழுந்து' ௭௮.

சிவந்து - கோபித்து, 'கதவெறியாச் சிவந்துராஅய்' ௪.

சிற்றனாயம் - அனாயமென்னும் நகரத்தின் ஒருபாகம், ௨௦௨.

சிறந்த - மிகுந்த, 'சிறந்த சீர்கெழுகொடியும்' ௧; 'சிறந்த - நான்மறை முனிவர்' ௬.

சிறந்தன்று - கனத்தது, 'சிறியோன் பெறினது சிறந்தன்று மன்னே' ௭௫.

சிறப்பு - செல்வம், 'தகைப்பெருஞ் சிறப்பிற் குடுமிக் கோமான்' ௬௪; தலைமை, 'வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி' ௧௫; 'உரைசால் சிறப்பிற் புகழ்சான் மாற' ௫௭; 'உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்' ௭௨.

சிறுகுடி - பண்ணனூர், 'கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடி' ௭௦.

சிறுபதம் - தண்ணீர், 'கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்' வ௪.

சிறுபேராளர் - சிறியபெரிய ஆண்மையையுடையோர், 'நெடுமொழி மறந்த சிறுபேராளர்' ௧௭௮.

சிறை - அரண், 'நீர்மிகிற் சிறையு மில்லை' ௫௧; காவல், 'வீங்குசிறை வியலருப்பம்' ௧௭; சிறகு, 'இருந்துசிறை வலைவாய்ப் பருந்து' ௫.

சினவின் - கோபித்தெழுமாயின், 'இருஞாயிறு முண்டோ ஞாயிறு சினவின்' ௯௦.

சினை - மரக்கிளை, 'குலவுச்சினைப் பூக்கொய்து' ௧௧.

சினைஇ - கோபித்து, 'அலங்குளைப் புரவி யைவரொடு சினைஇ' ௨; 'மடங்கலிற் சினைஇ' ௭௧.

சினைஇயோர் - சினப்பித்தோர், 'வளவநிற் சினைஇயோர் நாடே' ௪௧.

## சீ.

சீக்கும் - தூக்கும், 'மந்தி சீக்கு மணங்குடை முன்றில்' ௨௪௭.

சீர் - அளவு, 'விரிசீர்த் - தெரிகோல்' ௬. தலைமை, 'விழுச்சீர் - ஒடாப் பூட்கை' ௧௨௬; 'தண்குரவைச் சீர்தூங்குந்து' ௨௪. தாளம், 'பறைச்சீர் தூங்க' ௬௨. நன்மை, 'சீருடைய விழைபெற்றிசினே' ௧௧. பெருமை, 'சீர்கெழு கொடியு மவ்வே றென்ப' ௧.

சீர்த்தி - மிகுபுகழ், 'அருஞ்சீர்த்திப் பெருங்கணுறை' ௧௫.

சீரை - துலாம், 'சீரை புக்க வரையா வீகை யுரவோன்' ௪௫.

## சு.

சுட்டின் - குறிப்பின், 'தொன்னிலக் கிழமை சுட்டின்' ௫௨.

சுடர் - ஒளி, 'தெறுசுடர் ஒண்கதிர் ஞாயிறு' ௬. சூரியன், 'சுடர் சுட்ட சுரத்தேறி' ௧௫௬.

சும்மை - ஆரவாரம், 'கலிச்சும்மை வியலாங்கண்' ௨௨.

சுரம் - அரியவழி, 'நெடிய வென்னாது சுரம்பல கடந்து' ௪௭.

சுருக்கி - கட்டி, 'நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி' ௬௪.

சுருக்கினெம் - கட்டினேம், 'சுருக்கினெங் கலப்பை' ௨௦௬.

சுவல் - தோள், 'சுவலழுந்தப் பலகாய' ௧௫௧; 'சுவற்பூண் ஞாண்மிசைப் பொலிய' ௧௬௫. மேட்டுநிலம், 'வேங்கைச் செஞ்சுவல்' ௧௨௦.

சுவைக்க - உண்ண, 'சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்' ௧௨௭.

சுற்றம் - கிளைகள், 'நகைப்புற னாகநின் சுற்றம்' ௨௯.

சுறவு - ஒருமீன், 'சுறவினத் தன்ன வாளோர்' ௧௫.

## சூ.

சூட்டிய - நடாத்திய, 'நீரக விருக்கை யாழி சூட்டிய' ௯௧. பரப்பிய, 'நிலவரை சூட்டிய நீணெடுந் தானை' ௨௨௮.

சூடு - சூட்டிறைச்சி, 'குறுமுயற் கொழுஞ்சூடு' ௫௪. நெற்சூடு, 'பீலி - கழனி யுழவர் சூட்டொடு தொகுக்கும்' ௧௫.

சூர் - சூரபன்மா, 'சூர்நவை முருகன்' ௨௩.

சூர்ப்பு - வளைந்தகடகம், 'சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை' ௧௫௩.

சூல் - கருப்பம், இளம்பிடி யொருசூற் பத்தீ னும்மோ' ௧௩௦.

சூழ்ச்சி - உசாவுதல், 'போற்றார்ப் பொறுத்தலுஞ் சூழ்ச்சிய தகலமும்' ௨.

## செ.

செக்கர் - செந்நிறம், 'செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்ற' ௧௬.

செங்கோலை - செங்கோலையுடையை, 'அறந்துஞ்சுஞ் செங்கோலையே' ௨௦.

செத்து - அறிந்து, 'முழவின் - பாடின் றெண்கண் கனிசெத்து' ௧௨௮.

செதுக்கண் - ஒளிமழுங்கினகண், 'புதுக்கண் மாக்கள் செதுக்க ணார' ௨௬௧.

செந்தில் - திருச்செந்தூர், 'வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில், நெடுவே ணிலைஇய காமர் வியன்றுறை' ௫௫.

செம்பியன் - சோழன், 'சினங்கெழு தானைச் செம்பியன் மருக' ௩௭.

செம்பியர் - சோழர், 'சேண்வி[illegible] சிறப்பிற் செம்பியர் மருகன்' ௨௨௮.

செம்மல் - தலைமை, 'தம்மைப் பிழைத் தோர்ப் பொறுக்குஞ் செம்மல்' ௪௩; நும்மோ ரன்ன செம்மலு முடைத் தே' ௪௭.

செம்மலை - தலைமையையுடையாய், 'எமக்கும் பிறர்க்குஞ் செம்மலை யாகலின்' ௧௬௬.

செம்மற்று - தலைமையையுடையது, 'செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை' ௩௩.

செம்மீன் - அங்காரகன்; திருவாதிரையுமாம்; 'செம்மீ னிமைக்கு மாக விசும்பின்' ௬௦.

செம்மை - நேர்மை, 'செந்தொடை பிழையா வன்க ணாடவர்' ௩.

செய் - செய்கை, 'பெருஞ்செய் யாடவர்' ௧௧௩.

செய்தி - செய்கை, 'குடிப்பொரு ளன்று நுஞ் செய்தி' ௪௫. செய்ந்நன்றி, 'செய்தி கொன்றோர்க் குய்தி யில் லென' ௩௪. செய்வை, 'இனிய செய்திநின் னார்வலர் முகத்தே' ௧௨.

செய்தீமோ - செய்வீராக, 'அறஞ்செய் தீமோ வருள்வெய் யோய்' ௧௪௫.

செய்ம்மே - செய்வாயாக, 'வேட்டது செய்ம்மே' ௪௬.

செயற்கை - தொழில்; 'இயற்கை யல்லன செயற்கையிற் றோன்றினும்'

செயிர் - குற்றம், 'செயிர்தீர் கற்பிற் சேயிழை' ௩.

செயிர்த்தன்று - வெகுண்டது, 'செற் றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' ௨௨௬.

செரீஇ - செருகி, 'மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ' ௨௨.

செரு - சண்டை, 'செருமிகு சேஎய்' ௧௪.

செருக்கிய - களித்த, 'திணிந்தின்று செருக்கிய நெருப்புத்தலை நெடுவேல்' ௨௦௦.

செல்ல - பரக்க, 'உரைசெல முரசு வௌவி' ௨௬.

செல்லாமோ - போவேமல்லேமோ, 'செல்லா மோதில் சில்வளை விறலி' ௬௪.

செல்வக்கடுங்கோவாழியாதன் - சேரமான்சிக்கற்பள்ளித்துஞ்சிய செல்வக் கடுங்கோ வாழியாதன், 'செருமிகு நோன்றாட் செல்வக் கடுங்கோ, வாழி யாத னென்றுத் தெவ்வர்' ௩௮௭.

செல்வை - செல்வமுடையாய், 'செல் வை யாயிற் செலவை யாகுவை' ௭௦.

செலல் - செல்லுதல், 'வீங்குசெலல் மண்டிலம்' ௮

செலவு - வீதி, 'செஞ்ஞா யிற்றுச் செலவும்' ௩௦.

செலியர் - தணிக, 'செலிய ரத்தைநின் வெகுளி' ௬.

செலீயர் - போவதாக, 'படாஅச் செலீயர்நின் பகைவர் நாளே' ௨௪.

செவ்வழி - இரங்கற்பண், 'சிறியாழ் செவ்வழி பண்ணி' ௧௪௪, ௧௪௭. மாலைப்பண், 'கைவழி மருங்கிற் செவ் வழி பண்ணி' ௧௪௯.

செவ்வானம் - செக்கர்வானம்; 'செவ் வானத்து வனப்புப் போன்றன' ௪.

செவ்வியோர் - நடுவுநிலைமையையுடையோர், 'செவ்வியோர்க் களித்தலும்' ௨௯.

செவிசெஞ்சேவல் - கழுகின் சேவல், 'கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த செவிசெஞ் சேவலும்' ௨௩௮.

செழியன் - பாண்டியன்; 'வென்வேற் செழிய' கக; 'சிதைதலுய்ந் தன்றே நின்வேற் செழிய' உரு.

செற்றன்று - கறுவுகொண்டது, 'செற் றன் றாயினுஞ் செயிர்த்தன் றாயினும்' உஉசு.

செற்றும - சென்றுசெறியும், 'ஆழற் புற றத் துமெம்பிற் செற்றும்' கருஉ.

செறல் - வெகுட்சி, 'செறனோக்கின் ......களிறு' கரு.

செறிவினை - அடக்கத்தையுடையாய், 'அறிவறி வாகாச் செறிவினை யாகி' கூo.

செறு - வயல், 'மலங்குமிளிர் செறுவில்' சுக; 'நூறுசெறு வாயினும்' கஅச.

செறுக்கும் - அடைக்கும், 'மீனிற் செறுக்கும்' எ.

செறுத்த - அடக்கிய, 'செறுத்த செய்யுள்' ருகூ.

செறுவர் - பகைவர், 'செறுவர் நோக்கியகண்' கoo.

சென்மே - செல்வாயாக, 'தேர்வே ளாயைக் காணியு சென்மே' ககூ.

சென்னி - சோழன், உoகூ. தலை, 'இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த, நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே' சு.

## சே.

சேக்கும் - உறங்கும், 'கயலார் நாரை போரிற் சேக்கும்' உச; 'பொய்கை நாரை போரிற் சேக்கும்' உoக.

சேக்கை - கட்டில், 'நுரைமுகந் தன்ன மென்பூஞ் சேக்கை' ருo.

சேண் - நெடுந்தூரம், 'சேண்விளங் கும் புகழ்' கo; 'சேண்விளங்கு சிறப்பின் ஞாயிறு' கஎச. நெடுநாள், 'திரியாச் சுற்றமொடு முழுதுசேண் விளங்கி' உ.

சேட்சென்னி - சோழன் நலங்கிள்ளி யின்பெயர், 'சேட்சென்னி நலங்கிள்ளி' உஎ; 'சேட்சென்னி நலங்கிள்ளி கேட்குவன் கொல்லென' உஉரு.

சேப்ப - தங்க, 'கான மஞ்ஞை கணனொடு சேப்ப' கஉஎ.

சேய்-முருகக்கடவுள், 'செருமிகுசேஎய்' கச.

சேர்ப்பன் - நெய்தனிலமுடையவன், 'பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ' சக.

சேர்ப்பு-கடற்கரை, 'பிறங்குநீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே' சக.

சேர்பு - பொருந்தி, 'மழகளிறு கந்து சேர்பு நிலைஇவழங்க' உஉ.

சேர்மின் - அடையும், 'நும்மரண்சேர் மின்' கூ.

சேறு - செறிவு, 'தலையோர் நுங்கின் றீஞ்சேறு மிசைய' உஉரு.

சேறும் - செல்லுதும், 'சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே' ககூ.

## சொ.

சொலிய - களையவேண்டி, 'புறவி னல்லல் சொலிய' ருக; 'பண்டைச் சாகாட் டாழ்ச்சி சொலிய' கo

சொன்றி - சோறு, 'புண்புல வரகின் சொன்றியொடு பெறூஉம்' ககஎ.

## சோ.

சோரும் - வடியும், 'அயறுசோரு மிருஞ் சென்னிய' உஉ.

## ஞ.

ஞமலி-நாய், 'தொடர்ப்படு ஞமலியின்' எச.

ஞமன் - சமன், யமன், 'தெரிகோல் ஞமன்ன்போல' சு.

## ஞா.

ஞாண் - நாண், 'சாப நோன்ஞாண்' கச; 'ஒங்குமலைப் பெருவிற் பாம்பு ஞாண் கொளீஇ' ருரு.

ஞாயில் - மதிற்சூட்டு, 'மீன்பூத் தன்ன வுருவ ஞாயில்' உக.

ஞாயிறு - சூரியன், 'நின்கடற் பிறந்த ஞாயிறு' உ; 'செஞ்ஞா யிற்றுக் கவினை' ச; 'ஒண்கதிர், ஞாயிறு' சு.

ஞான்ற - வீழ்ந்த, 'பட்ட மாரி ஞான்ற ஞாயிற்று' அஉ.

ஞிமிறு - தேனீ, 'வரிஞிமி றார்க்கும் வாய்புகு கடாம்' கூரு.

## ஞெ.

ஞெமல-பரக்க, 'வரிமணன் ஞெமல' கூo.

ஞெலிதல் - கடைதல், 'தான்ஞெலி தீயின் விளாவினன் சுட்டு' கருo.

ஞெலிதீ - கடைந்துகொள்ளப்பட்டதீ, 'கானவர் பொத்திய ஞெலிதீ விளக் கத்து' உசஎ.

ஞெள்ளல் - தெரு, 'கடுந்தேர் குழித்த ஞெள்ளல்' கரு.

## த.

தகடு - புறவிதழ், 'மாத்தகட் டொள்வீ தாய துறுகல்' ௨௦௨.

தகடூர் - ஓரூர், ௫௦.

தகரம் - ஒருமரம், 'தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்' ௧௯௨.

தகவு - தகுதி, 'காணுத்தக வுடைத்தே' ௯௬.

தகுதி - தக்கசெய்கை, 'தகுதி கேளினி மிகுதி யாள' ௧௮.

தகை - அழகு, 'தகைமாண் வழுதி' ௫௯. கூறுபாடு, 'வான்றுடைக்குந் தகைய போல' ௯௮. தகுதி, 'தகைமாண் குடுமி' ௬.

தகைத்த - கட்டப்பட்ட, 'நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை' ௭௦.

தகைத்தல் - சுற்றுதல், 'தகைத்தார்' ௬௯.

தங்கால் - திருத்தங்காலென்னுமோரூர், ௯௨௬.

தசும்பு - குடம், 'துணைபுண ராயமொடு தசும்புடன் றொலைச்சி' ௨௨௪. மிடா, 'தயிர்கொடு வந்த தசும்பு' ௯௯.

தஞ்சம் - எளியது, 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௯. எளியேன், 'யானோ தஞ்சம்' ௯௪.

தட்கும் - தளையாகிற்கும், 'ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே' ௧௧௯.

தட்டை - கிளிகடிகருவி, 'புனவர் தட்டை புடைப்பின்' ௪௯.

தட்டோர் - தடைப்படச்செய்தோர், 'தட்டோ ரம்ம விவட்டட் டோரே' [தள்-பகுதி]. ௧௮.

தட்ப - தடுப்ப, 'புள்ளிடை தட்ப' ௧௨௪.

தட - பெருமை, 'தாடோய் தடக்கை' ௧௪.

தடவரல் - வளைவு, 'தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின்' ௧௯௫.

தடவு - ஓமகுண்டம், 'வடபால் முனிவன் தடவினுட் டோன்றி' ௨௦௧. சுளை, 'தடவுவாய்க் கலித்த மாயிதழ்க் குவளை' ௧௦௫. பெருமை, 'தடவுநிலைப்பலவு' ௧௪௦; 'தடவுச்சினைப் பல்பழம்' ௧௧௯.

தடி - ஊன்றடி, 'என்பொடு தடிபடு வழியெல்லா மெமக்கீயு மன்னே' ௨௯௫. தசை, 'புலவுநாற்றத்த பைந் தடி' ௧௪.

தடியும் - வெட்டும், 'கடிமரந் தடியு மோசை' ௯௬.

தண்டம் - தண்டனை, 'தண்டமுந் தணிதிநீ' ௧௦.

தண்டா - தணியாத, 'தண்டா வீகை' ௬.

தண்மை - குளிர்ச்சி, 'தண்பொருநைப் புனற்பாயும்' ௧௧; மென்மை, 'தண்குரலை' ௨௪.

தண்ணுமை - முழவு, 'விசியுறு தண்ணுமை' ௮௯.

தணிதி - தணிவை, 'தண்டமுந் தணிதி' ௧௦.

ததும்ப - நிரம்ப, 'ததும்ப வைகி' ௧௭௭. மிகவொலிப்ப, 'ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப' ௧௯௪.

ததைய - சிதற, 'அருஞ்சமந் ததைய நூறி' ௯௩; 'அருஞ்சமந் ததையத் தாக்கி' ௧௨௬.

தந்து - கொண்டு, 'ஆரெயில் பலதந்து' ௬.

தப்பிய - பிழைத்த, 'பார்ப்பார்த் தப்பிய கொடுமை யோர்க்கும்' ௯௪.

தபுதி - அழிவு, 'புறவின் றபுதியஞ்சி' ௪௯.

தம்மென - தாருமென, 'இன்னுந் தம்மென வெம்மனோ ரிரப்பின்' ௨௦௯.

தமர் - தனக்குச்சிறந்தோர், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' ௧௫௭.

தமித்து - தனித்து, 'நூறுசெறு வாயினுந் தமித்துபபுக் குணினே' ௧௮௪.

தரீஇய - தரவேண்டி, 'ஆகலியாணர்த் தரீஇயகால் வீழ்த்து' ௨௦௫.

தரூஉந்து - தரும், 'எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து' ௨௪.

தரூஉம் - தரும், 'யொருபடை தரூஉங் கொற்றமும்' ௯௫.

தலை - இடம், 'பெருங்கை யானையிரும் பிடர்த்தலை யிருந்து' ௯.

தலைஇய - தலைப்பட்ட, 'வளித்தலைஇய தீயும்' ௨; பெய்துமாறிய, 'கார்ப்பெய றலைஇய' ௧௧௯.

தலைக்கை - முதற்கை, 'தலைக்கை தரூஉந்து' ௨௪.

தலைக்கொண்ட - தன்னிடத்தேகொண்ட, 'நிலந்தலைக் கொண்ட......ஈரைம் பதின்மரும்' ௨.

தலைக்கொண்டென - தொடங்கிற்றாக, 'சாறுதலைக் கொண்டென' ௮௨.

தலைப்பாடு - நேர்படுதல், 'தலைப்பாட் டன்றவ னீகை' ௭௦.

தலைப்போகன்மையின் - முடிவுபோகாமையின், 'தலைப்போ கன்மையிற் சிறுவழி மடங்கி' ௨௨௩.

தலைமயங்கிய - கைகலந்த, 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௯.

யாலங்கானம் - தலையாலங் கானமென்னுமூர், 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' ௧௯ ; இதன் வரலாற்றை, 'ஆலங்கானம்' என்பதிற் காண்க.

தவல் - இறந்துபடுதல், 'அவல மறுசுழி மறுகலிற் றவலே நன்று' ௨௩௮.

தவழ - பரக்க, 'எரிதவழ' ௩௮.

தவிரா - ஒழியாத, 'தவிரா வீகை, ௩.

தழீஇ - தழுவி, 'நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ' ௯௩. அணைத்துக் கொண்டு, 'ஒருபுடைத் தழீஇ' ௬௫.

தழீஇய - அணைத்துக்கொண்ட, 'சிறுமறி தழீஇய தெருநடை மடப்பிணை' ௨௩.

தழும்பனார் - ஒரூர், 'பாண்சேரி வாய்மொழித் தழும்பனூ ரன்ன' ௩௪௮.

தழை - மகளிரணியும் ஒருவகையுடை ; இது மலராலும் தளிராலும் செய்யப்படுவது, ௧௧௬, ௨௪௮.

தள்ளாதோர் - தளையாதவர், 'தள்ளாதோரிவட் டள்ளா தோரே' ௧௮.

தளம்பு - சேறுகுத்தி, 'மலங்குமிளிர் செறுவிற் றளம்புதடிந் திட்ட பழனவாளை' ௬௧.

## தா.

தா - வலி, 'தாவி னன்பொன்' ௧௫௨.

தாக்கி - வெட்டி, 'அருஞ்சமந்ததையத் தாக்கி' ௧௨௬.

தாங்க - பிடிக்க, 'முன்புதுரந்து சமந் தாங்கவும்' ௧௪.

தாங்கி - தடுத்து, 'வருதார் தாங்கி' ௬௨. பொறுத்து.

தாங்கிய - தடுத்த, 'எழூஉத் தாங்கிய கதவு' ௯௭.

தாயம் - உரிமை, 'மலர்தாயத்து' ௧௭ ; 'முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்' ௭௩.

தார் - மாலை, 'வண்ண மார்பிற் றாருங் கொன்றை' ௧ ; 'சிலைத்தார் மார்ப' ௧௦ ; 'சிலைத்தா ரகலம்' ௬௧. முன்படை, 'ஒண்படைக் கடுந்தார் முன்பு தலைக் கொண்மார்' ௧௫ ; 'வருதார் தாங்கி' ௬௨.

தாரம் - பலபண்டம், 'கடற்பஃ றாரத் த நாடுகிழ வோயே' ௩௦.

தாலம் - உண்கலம், 'பெருந்தோ டாலம் பூசன் மேவர' ௧௨௦.

தாலி - ஐம்படைத்தாலி ; இஃது இளமைப்பருவத்திற் கழுத்திலணியும் ஒருவகை அணி, 'தாலி களைந்தன்று மிலனே' ௭௭.

தாழை - தெங்கு, 'குலையிறைஞ்சிய கோட்டாழை' ௧௭.

தாள் - முயற்சி, 'தாளிற் றந்து' ௧௮ ; மதனுடை நோன்றாள்' ௭௫ ; 'தாளிற் கொள்ளலிர்' ௧௦௯.

தானை - சேனை, 'நிலவரை ருட்டிய நீணெடுந் தானை' ௨௨௮.

## தி

திகழ்தல் - விளங்குதல், 'மீன்றிகழ் விசும்பு' ௨௫.

திங்கள் - சந்திரன், 'பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்' ௧௩. மாதம், 'திங்கள் வலித்த காலன் னோனே' ௮௭.

திணிந்த - செறிந்த, 'மண்டிணிந்த நிலனும்' ௨.

திணை - குடி, 'ஆடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த - வாளின் வாழ்நர்' ௨௪ ; 'வேற்றுமை யில்லா விழுத்திணைப் பிறந்து' ௨௭ ; விழுத்திணைப பிறந்த - விசைமேந் தோன்றல்' ௧௫௧.

தித்தன் - ஒரு சோழன், 'போராருந் தித்தன் காணகதில்' ௮௦ ; 'மாவண் டித்தன் வெண்ணெல் வேலியுறந்தை யன்ன' ௩௫௨ ; 'சிறுகண் யானைப் பெறலருந் தித்தன்' ௩௯௫.

திமிரி - திமிர்ந்து, 'எச்சி லீர்ங்கை விற்புறந் திமிரி' ௨௫௮.

திமில் - மீன்படகு, 'திண்டிமில் வன்பரதவர்' ௨௪ ; 'முந்நீர் நாப்பட் டிமிற் சுடர் போல' ௬௦.

திரங்கி - உலர்ந்து, 'ஒளிறுவாண் மன்னரொண்சுடர் நெடுநகர் - வெளிறு கண போகப் பன்னாட் டிரங்கி' ௧௭௭.

திரங்கிய - உலர்ந்த, 'பசிதினத் திரங்கிய கசிவுடை யாக்கை' ௧௬௦.

திரியினும் - வேறுபடினும், 'நால்வேத நெறிதிரியினும்' ௨.

திரியீர் - வேறுபடீர், 'உடனிலை திரியீ ராயின்' ருஅ.

திருகி - முறுகி, 'விசும்புதிப் பிறப்பத் திருகி' கூஎ.

திருகிய - முறுகிய, 'சினந்திருகிய' உரு.

திருத்தி - செவ்விதாக்கி, 'கொடிது க டிந்து கோறிருத்தி' கஎ.

திருவில் - இந்திரவில், 'திருவி லல்லது கொலைவி லறியார்' உ௦.

திரைக்கும் - சுருட்டும், 'நிலந்திரைக் குங் கடற்றூனை' கூய.

தில்லை - ஒருமரம், 'தில்லை யன்ன புல் லென் சடையோன்' உருஉ.

திளைப்ப - விளையாடாநிற்க, 'இளையர் திளைப்ப' உருரு.

திறத்தல் - திறத்தல் செய்வாயாக, 'அ றவை யாயி னினதெனத் திறத்தல்' - - -

திறம் - கூறுபாடு, 'திற்றிறஞ் சிறக்க' சு. பக்கம், 'பெண்ணுரு வொருதிற னாகின்று' க.

திறல் - வலி, 'தன்னருந் திறல்' ரு; 'தன்னருங் கடுந்திறல்' ருகூ.

திறவோர் - கூறுபாடறிவோர், 'திற வோர் - காட்சியிற் றெளிந்தனம்' ககஉ.

தின்மென - தின்மினெனை, 'இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலி ன்' கரு௦.

தீ

தீஞ்சாறு - இனியசாறு, 'பூங்கரும்பின் றீஞ்சாறும்' உச.

தீஞ்சுளை - இனியசுளை, 'தீஞ்சுளைப் பல வின் பழமூழ்க் கும்மே' க௦கூ.

தீட்டி - கோதி, 'கூந்த நீட்டி' சுஉ.

தீது - குற்றம், 'தீதுமருங் கறுமார்' கூரு.

தீநீர் - இனியஇளநீர், 'குலவுத்தாழைத் தீநீரோடு' உச.

தீமை - கொடுமை, 'நீமெய் கண்ட தீமை காணின்' க௦.

தீர்தல் - அறுதல், 'செயிர்தீர் கற்பு' கூ.

தீர்ந்தன்று - தீர்ந்தது, 'புரைதீர்ந் தன் றது' சஉ.

து.

துகிர் - பவழம், 'பொன்னுந் துகிரு முத்தும்' உகஅ.

துஞ்சாய் - மடியாய், 'துஞ்சாய் மாறே' உஉ.

துஞ்சுதல் - தங்குதல், 'புலிதுஞ்சு விய ன்புலம்' ருச.

துஞ்சும் - தங்கும், 'அறந்துஞ்சுஞ் செ ங்கோலையே' உ௦. தூங்கும், 'முத்தி விளக்கிற் றுஞ்சும்' உ.

துடைக்கும் - தடவும், 'வான்றுடைக் குந் தகையபோல' கூஅ.

துணி - துண்டம், 'வெளிற்றுப் பனந் துணி' கூரு.

துணியல் - தடி, 'பழன வாளைப் பரூஉ க்கட் டுணியல்' சுக.

துணிவு - தெளிவு, 'துன்னல் போகிய துணிவி னோனென' உகூ; 'துணிவி லோரே' உகச.

துப்பு - வலி, 'துப்புறுவர்' கக; 'கடு மான் கோதை துப்பெதிர்ந் தெழு ந்த' ருச.

துமிந்து - துணிந்து, 'தூம்புடைத் தட க்கை வாயொடு துமிந்து' ககூ.

துமிய - துணிய, 'அணங்குடை யரவி னருந்தலை துமிய' உகக.

துய் - பஞ்சு, 'துய்த்தலை மந்தியை' கருஅ.

துயின்மடிதல் - உறங்குதல், 'துயின்ம டிந் தன்ன' கஉசு.

துரந்து - செலுத்தி, 'முன்பு துரந்து' கச.

துரப்ப - செலுத்த, 'ஊக்கந் துரப்ப' அ.

துவ்வாள் - உண்ணுள், 'துவ்வா ளாகிய வென்வெய் யோளும்' கருகூ.

துவராபதி - இது பழையவேளிர்களின் நகரம்; இருங்கோவேளுடையது; துவரையெனவும் வழங்கும். 'உவரா வீகைத் துவரை யாண்டு, நாற்பத் தொன்பது வழிமுறை வந்த, வேளி ருள் வேளே' உ௦க; இது துவார ஸமுத்திரமென்று இப்பொழுது வழ ங்கப்படுகின்றது. 'அகத்தியனார்... துவராபதிப்போந்து நிலங்கடந்த நெ டுமுடியண்ணல்வழிக்கண் அரசர் பதி னெண்மரையும் பதினெண்குடி வே ளிருள்ளிட்டாரையும் அருவாளரையு ங்கொண்டுபோந்து காடுகெடுத்து நா டாக்கி' எனத் தொல்காப்பியப்பாயிர வுரையிலும், 'மலயமாதவன் நிலங் கடந்த நெடுமுடியண்ணலுழை நர பதியருடன்கொணர்ந்த பதினெண் வகைக் குடிப்பிறந்த வேளிர்க்கும்' என அகத்திணையியல் கூஉ-ம் சூத் திரவுரையிலும் நச்சினார்க்கினியரெழு தியிருத்தல்காண்க.

துவரை - துவராபதி, ௨௦௧.
துவை - உணவின்விசேடம், 'ஊன்றுவை - கறிசோ றுண்டு' ௧௪; 'அட்டான் றானாக் கொழுந்துவை யூன்சோறு' ௧௧௩.
துவைத்து - ஒலித்து, 'துவைத்தம்பிற் றுனைதோன்றுவ' ௪.
துழந்த - துழாவிய, 'துடுப்பிற் றுழந்த' ௨௬.
துழந்து - துழாவி, 'இட்டுந் தொட்டுங் கௌவியுந் துழந்தும்' ௧௮௮.
துழவும் - சூழ்வரும், 'மாதிரந் துழவுங்-கவலை நெஞ்சத்து' ௧௭௪.
துளங்கல்செல்லாது - தளராது, 'தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்செல் லாது' ௫௮.
துளங்கிய - நிலைகலங்கிய, 'கடிமரந் துளங்கிய காவும்' ௨௩.
துளங்கின - தளர்ந்தன, 'குடைதுளங்கினவே' ௬௨.
துளங்குதல் - அசைதல், 'துளங்கியலாற் பணையெருத்தின' ௧௫.
துறுகல் - பொற்றைக்கல், 'மாத்தகட் டொள்வீ தாய துறுகல்' ௨௦௨.
துறையூர் - ஓரூர், 'தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை, நுண்பல மணலினும்' ௧௩௬.
துன்னம் - தையல், 'இழைவலந்த பஃறுன்னத்து' ௧௩௬.
துன்னல் - அணுகுதல், 'துன்னல் போகிய' ௨௩.

## தூ.

தூஉய் - தூவி, 'உயர்பலி தூஉய்' ௧௪௩.
தூங்க - ஆட, 'பறைச்சீர் தூங்க' ௬௨.
தூங்குதல் - செறிதல், 'தூங்கிருள் இறும்பில்' ௧௨௬.
தூங்குந்து - ஆடும், 'தண்குரவைச் சீர் தூங்குந்து' ௨௪.
தூம்பு - துளை, 'தூம்புடைத் தடக்கை' ௧௩.
தூவல் - துவலை, 'தூவற் கலித்த தேம் பாய் புன்னை' ௨௪.
தூவாத - உண்ணாத, 'தூவாக் குழவி போல' ௪.

## தெ.

தெரிகோல் - பொருள்களை ஆராயும் துலாக்கோல், 'தெரிகோன் ஞமன்ன் போல' ௬.
தெரியல் - மாலை, 'பாசிலைத் தெரியல்' ௨௩; 'பொலனறுந் தெரியல்' ௨௯; 'ஆர்புனைதெரியல்' ௮௨.
தெவ்வர் - பகைவர், 'செய்வினைக் கெதிர்ந்த தெவ்வர்' ௬.
தெவ்விர் - பகைவிர், 'களம்புகலோம் புமின்றெவ்விர்' ௮௭.
தெவிட்டும் - அசையிடும், 'வன்கலை தெவிட்டும்' ௧௬௧.
தெற்றி - திண்ணை, 'இலங்குவளை மகளிர் தெற்றி யாடும்' ௫௩; வேதிகை, 'குறுந்தொடி மகளிர் - பொலஞ்செய் கழங்கிற் றெற்றி யாடும்' ௩௬.
தெறல் - அழித்தல், 'வலியுந் தெறலு மளியு முடையோய்' ௨; வெம்மை, 'செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது' ௨௦.
தெறிக்கும் - துள்ளும், 'தாவுபு தெறிக்கு மான்மேல்' ௨௫௧.
தெறித்தல் - துள்ளல், 'தெறிநடை மடப்பிணை' ௨௩.
தெறிப்ப - முற்ற, 'தெறிப்ப விளைந்த தீங்கந் தாரம்' ௨௫௮.
தெறுகதிர் - சுடுகின்றகதிர், 'தெறுகதிர்க் கனலி' ௪௩.
தெறுதல் - சுடுதல், 'தெறுசுட - ரொண்கதிர் ஞாயிறு' ௧௫. தண்டஞ்செய்தல், 'கொடியோர்த் தெறுதலும்' ௨௯.
தெறுவர - வெகுட்சிதோன்ற, 'தெறுவர விருபாற் படுக்குநின் வாய்வாள்' ௫௦.
தெறூழ் - காட்டிலுள்ள தோர்கொடி; புளிமாவென்றுமுரைப்பர், 'தெறூழ் வீ பூப்ப' ௧௧௯.
தென்புலவாழ்நர் - தென்றிசைக்கண்வாழ்வோர்=பிதிரர், 'தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும் - பொன்போற் புதல்வர்' ௯.
தென்னம்பொருப்பு - பொதியின்மலை, 'தென்னம் பொருப்ப னன்னாடு' ௩௩.
தெனாஅது - தெற்கின்கண்ணது, 'தெனாஅ துருகெழு குமரி' ௬.

## தே.

தேம் - தேயம், 'தெவ்வர் தேஎத்து' ௬. தேன், 'தேம்பாய் புன்னை' ௨௪.
தேர்க்கால் - குயவன் கலம்வனையுந் திகிரி; தேர்க்கால்போன்றிருத்தலின் இப்பெயர்பெற்றது, 'வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த - பசுமண்' ௩௨.

தேற்றாய் - தெளியாய், 'தேற்றாய் பெரும பொய்யே' ௫௧.

தேறலை - தெளியாய், 'பிறர்பழி கூறுவோர் மொழிதேறலையே' ௧௦.

## தை.

தைஇ - செய்த, 'பாணர் சென்னி பொலியத் தைஇ' ௧௨௬.

தைஇய - செய்துபுனைந்த, 'கழறைஇய வல்லாளனை' ௪௦. புனைந்துசெய்த, 'வல்லோன் றைஇய' ௯௯.

தைவருதல் - தடவிவருதல், 'விசும்பு தைவரு வளியும்' ௨.

## தொ.

தொகுக்கும் - திரட்டும், 'தொகுக்குங் கொழுமீன்' ௧௯.

தொட்டு - செறித்து, 'கழறொட்டு' ௭௭. தோண்டி, 'மைந்தர் புண்டொட்டு' ௬௨.

தொடர் - சங்கிலி, 'தொடர்ப்படு ஞமலியின்' ௭௪.

தொடி - பூண், 'தொடித்தலை விழுத்தண்டு' ௨௪௯. வளை, 'ஒண்டொடி மகளிர்' ௨௪; 'தொடிகழித் திடுதல்' ௮௯. வீரவளை, 'தொடித்தோள்' ௨௬.

தொடுக்குவர் - வளைத்துக்கொள்வர், 'தமதெனத் தொடுக்குவ ராயின்' ௧௯௫.

தொடுதல் - தோண்டுதல், 'தொடுகடல்' ௬.

தொடுமின் - பிழிமின், 'நறவுந் தொடுமின்' ௨௬௨.

தொடை - சந்து, 'தொடைப் பொலிந்த வலிகெழு தோன்றல்' ௭௮; தொடுத்தல், 'செந்தொடை பிழையா வன்கணாடவர்' ௯; யாழ்நரம்பு, 'தேவர்ந் தொடைச் சீறியாழ்' ௭௦.

தொண்டி - இது கடற்கரையிலுள்ளதொரு நகரம், சேருடையது, 'தண்டொண்டியோ ரடுபொருந' ௧௭; 'கண்ணறும்மே கானலந் தொண்டி' ௪௮.

தொலைஇயோன் - தொலைவித்தோன், 'தொலைஇயோ னிவனென' ௧௨௫.

தொலைச்சி - தொலைத்து, 'வெங்கட்டொலைச்சிய மமையார்' ௨௧; 'தசும்புடன் றொலைச்சி' ௨௨௪.

தொலைச்சிய - தொலைத்த, 'மான்கணந் தொலைச்சிய' ௧௫௦.

தொழில் - செயல், 'பிறிதுதொழி லறியா வாகலின்' ௧௪.

தொழுதி - கூட்டம், 'இரும்பிடித் தொழுதி' ௪௪.

தொழுவர் - உழவர், 'நெல்லரி தொழுவர்' ௨௦௧.

தொன்று - பழைமை, 'தொன்றிசை' ௨௧௭.

## தோ.

தோட்டி - அங்குசம், 'பொன்னியற் புனைதோட்டியால்' ௧௪. ஒருமலை, இது கண்டீரக்கோப்பெருநள்ளியுடையது, 'இரும்புபுனைந் தியற்றாப் பெரும் பெயர்த் தோட்டி' ௧௫௦.

தோடு - இதழ், 'பொலந்தோட்டுப் பைந்தும்பை' ௨௨. இலை, 'தோடொலிபுநந்தி' ௧௨௦. தொகுதி, 'தோடுகொண் முரசு' ௨௯௮.

தோண்டாது - பறியாமல், 'மிசைப்பரந் தோண்டாது' ௯௦.

தோய்தல் - பொருந்துதல், 'தாடோய் தடக்கை' ௧௪.

தோல் - கேடகம், 'தோல் - துவைத் தம்பிற் றுளைதோன்றுவ' ௪. பரிசை, 'மழையுருவின தோல்பரப்பி' ௧௬; 'தோல்கழியொடு பிடிசெறிப்பவும்' ௬௭. யானை, 'தோல்பெயரிய வெறுழ்முன்பின்' ௭.

தோற்றம் - காட்சி, 'அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல' ௯௧.

தோன்றல் - தலைவன், 'புகழ்சால் தோன்றல்' ௨௧

## ந.

நக்க - சுடுக, 'வரியு நக்க' ௫௭.

நகர் - கோயில், 'முக்கட் செல்வர் நகர்' ௬, 'ஒளிறுவாண் மன்னரொண்சுடர் நெடுநகர்.' நகரம், 'நெடுநகர் வினைபுனை நல்லில்' ௨௯.

நகாஅல் - நகுகின்றிலேன், 'நகாஅலென வந்த மாறே' ௨௫௯.

நகுதக்கனர் - சிரிக்கத்தக்கார், 'நகுதக் கனரே நாடுமீக் கூறுநர்' ௭௨

நகை - மகிழ்ச்சி, 'வாயார் பெருநகை' ௨௧௨.

நசை - ஆசை, 'நசைதர வந்தோர் நசை பிறக் கொழிய' ௧௫.

நசைவர் - விரும்பிவந்தோர், 'நசைவர்க்கு மென்மை யல்லது' ௧௭௦.

நசைவேட்கை - நச்சியவிருப்பம், 'நின்னசை வேட்கையி னிரவலர் வருவர்' ௯.

நடுக்கு - நடுக்கம், 'நடுக்கின்றி நிலீஇ யரோ' உ.

நடுங்க - தலையசைத்துக்கொண்டாட, 'சீறியாழ் நயம்புரிந் துறையுநர் நடுங் கப் பண்ணி' கசரு.

நணுநர் - பகைவர், 'நண்ணார் நாண நாடொறுந் தலைச்சென்று' உரு.

நணி - அணிமை, 'திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்' கருச.

நம்பி - விரும்பி, 'வாயார நின்னிசை நம்பி' கருகூ.

நயந்து - மகிழ்ந்து, 'நயந்தளித்தல்' ருக. விரும்பி, 'நலனயந் தென்றும் வருஉம்' கசச.

நயம் - இன்பம், 'நயம்புரிந் துறையுநர்' கசரு.

நயவ - நியாயத்தை யுடையன, 'நல்ல போலவு நயவ போலவும்' ருஅ.

நயன் - ஈரம், 'நயனில் கூற்றம்' உஉஎ.

நரந்தம் - நரந்தப்பூ, 'நரந்த நாறுந் தன் கையால்' உருரு.

நரலுதல் - மூங்கிலிலைழந்தொலித்தல், 'ஆடுகழை நரலும்' கஉ0.

நல் - வறுமை; நல்குரவென்பது நல்லெனக் குறைந்து நின்றது; 'நல்குயின் றன்னவெனல்கூர் வளிமறை' ககசு.

நல்க - அளிக்க, 'பரிசிலர்க் கருங்கல நல்கவும்' கச.

நல்கி - கொடுத்து, 'பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி' சு.

நல்கினும் - உவப்பினும், 'நல்கினு நல்கா ரயினும்' அ0.

நல்லவர் - பெண்டிர், 'நல்லவர்க் காரணங் காகிய மார்பு' கச.

நல்லியக்கோடன் - ஒய்மா நல்லியக்கோடன், 'பெருமா விலங்கைத் தலைவன் சீறியா - ழிலவேலோர் சொன்மலை நல்லியக் கோடனை' கஎசு.

நவ்வி - மான்குட்டி, 'சிறுதலை நவ்வி' உ.

நவியம் - கோடாலி, 'வடிநவி னவியம் பாய்தலின்' உரு; 'நெடுங்கை நவியம் பாய்தலின்' ருசு.

நவியம்பாய்தல் - வெட்டுதல், உரு; ருசு.

நவிலுதல் - பயிலுதல், 'மறைநவி லந்தணர்' க.

நள்ளி - கண்டீரக்கோப் பெருநள்ளி; இவன் ஒருவள்ளல், 'பிறங்குமலை நள்ளி' கசஅ; 'நளிமலை நாட னள்ளியவ னெனவே' கரு0; 'ஆர்வமுற் - றுள்ளி வருந ருலைவுநனி தீரத் - தள்ளா தீயுந் தகைசால் வண்மைக் - கொள்ளா ரோட்டிய நள்ளியும்' கருஅ.

நன்னென்மாலை - நன்னென்னும் ஓசையையுடையமாலை, 'நன்னென் மாலை மருதம் பண்ணி' கசக.

நளி - குளிர்ச்சி, 'மரம்பிறங்கிய நளிச் சிலம்பு' கருசு. செறிவு, 'நளியிரு முந் நீர்' சுசு. பெருமை, 'நளிகடல்' உசு.

நளிய - செறிவையுடைய, 'நன்மர நளிய நறுந்தண் சாரல்' கரு0.

நற்கு - நன்கு, 'அதுநற் கறிந்தனை யாயின்' ருரு; 'அதுநற்கறிந்தனையாயின்' கஉக.

நறும்புல் - ஒருவகைப்புல், 'நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி' கருஉ.

நறுமை - நன்மை, 'பொலனறுந் தெரியல்' உகூ.

நறை - நறைக்கொடி, 'நறைநார்த் தொடுத்த வேங்கையங் கண்ணி' கசுஅ.

நன்று - பெரிது, 'நன்று மெல்லிய பெரும' கச; 'நன்று கொய்தா லம்ம' எரு. நல்வினை, 'சான்றோர் செய்த நன்றுண் டாயின்' ருச.

நன்னன் - ஒருசிற்றரசன், 'பொலந்தேர் நன்னன் மருகன்' கருக.

நனந்தலை - அகன்றவிடம், 'நனந்தலை நல்லெயில்' கரு; 'நனந்தலைப் பேரூர்' ருஎ; 'கழைபயி னனந்தலைக் கறிவள ரடுக்கம்' கசுஅ.

## நா.

நாகன் - காலெழிழான்நாகன், 'திருந்து வே ணாகன்' கஎக.

நாஞ்சில் - கலப்பை, 'நாஞ்சி லொப்ப நிலமிசைப் புரள' கக; நாஞ்சின்மலை, 'செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந' கருஎ; 'உயர்சிமய வுழாஅ நாஞ்சிற் பொருந' கருக; 'தடவுநிலைப் பலவி னாஞ்சிற் பொருநன்' கச0; 'தீஞ்சுளைப் பலவி னாஞ்சிற் பொருந' ருஅ0.

நாட்டம் - ஆராய்ச்சி, 'அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து' ருரு; 'நாற்ற நாட்டத் தறுகாற் பறவை' எ0.

நாட்டை - நாட்டையுடையாய், 'ஆடு களங் கடுக்கு மகநாட் டையே' உஅ.

நாடல் - ஆராய்தல், 'நாடல் சான்ற மைந்தினோய்' கரு.

நாடன்-குறிஞ்சிநிலமுடையோன், 'நாடனென்கோ வூர னென்கோ' ௪௯.
நாடனை - நாட்டையுடையாய், 'காவக நாடனை நீயோ' ரு; 'பெருங்க ணுடனை' ௧௬௭.
நாடி - ஆராய்ந்து, 'ஒப்ப நாடி' ௧௦.
நாப்பண் - நடு, 'பன்மீ னப்பட் டிங்கள் போலவும்' ௧௩; 'முந்நீர் நாப்பட் டிமிற்சுடர் போல' ௬௦.
நாம் - அச்சம், 'நாம நல்லமர் செய்ய' ௧௯.
நாய் - சூதாடுகருவி, 'நாயிடக் குழிந்த - வல்லி னல்லகம்' ருஉ.
நார் - பன்னாடை, 'நார்பிழிக் கொண்ட வெங்கள்' ௧௭௦; 'நாரரி' உ௩உ.
நாலைகிழவன் - நாலைகிழவனாகன், 'தோலா நல்லிசை நாலை கிழவன் - பருந்து பசி தீர்க்கு நற்போர்த் - திருந்துவேளாகன்' ௧௭௯.
நாவாய் - மரக்கலம், 'முந்நீர் வழங்கு நாவாய்' ௧௩.
நாள் - காலை, 'நாண்மகி ழிருக்கை' உ௯.
நாளவை - நாளோலக்கம், 'செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்' ருச.
நாற்றம் - மணம், 'நாற்ற நாட்டத் தறுகாற் பறவை' ௭௦.

## நி.

நிமிர்தல் - மிகைத்தல், 'நிமிர்பரிய மா தாங்கவும்' ௧௪.
நிரயங்கொள்பவர் - நரகத்தைத் தமக்கு இடமாகக்கொள்பவர், 'நிரயங் கொள்பவரொ டொன்றாது' ரு.
நிரயம் - நரகம், ரு.
நிணக்கும் - கட்டும், 'கட்டி னிணக்கு மிழிசினன்' ௮உ.
நிலவு - நிலைத்தல், 'நிலவுக்கடல் வரைப்பு' ௬.
நிலியர் - நிற்பாயாக, 'நடுக்கின்றி நிலியரோ வத்தை' உ.
நிலீயர் - நிலைபெறுவாயாக, 'நிலீய ரத்தைநீ நிலமிசை யானே' ௧௬௬.
நிலை - நிற்றல், 'பணைநிலை முனைஇ' உ௬.
நிலைஇய - நிலைபெற்ற, 'வறிது நிலைஇய காயமும்' உ௦; 'செந்தில் - நெடுவேணிலைஇய காமர் வியன்றுறை' ருரு; 'வறிது நிலைஇய காயமும்' ௩௦.
நிலைஇயர் - நிற்பதாக, 'நின்று நிலைஇயர் நின் னாண்மீன்' உ௪.
நிலையழிந்து - நிலைகலங்கி, 'கவியம்பாய் தலினிலையழிந்து' ௩௬.
நிவந்து - ஓங்கி, 'மாக்கட னிவந்தெழுதரும்' ௪; 'உருகெழு மதிய னிவந்து சேண் விளங்க' ௩௧.
நிவப்பு - ஓங்குதல், 'நீர்நிலை நிவப்பு' ௬; 'நீரழுவ நிவப்பு' ௧௪.
நிழற்ற - நிழலைச்செய்ய, 'வெண்குடை - மண்ணக நிழற்ற' ௩.
நிழற்றிய - நிழலைச்செய்த, 'வெண்குடை நிழற்றிய' ௧௮௬.
நிழற்றும் - நிழலைச்செய்யும், 'கொடிவிசும்பு நிழற்றும்' ௬; 'தீமிகின் - மன்னுயிர் நிழற்று நிழலு.மில்லை' ருக.
நிற்பின்-நின்றால, 'முந்தை நிற்பின்' ௧௦.
நிறீஇ - நிறுத்தி, 'தம்புகழ் நிறீஇ' ௧௮.
நினவ - நின்னுடையனசிலகாரியம், 'நினவ கூறுவல்' ௩ரு.

## நீ.

நீர்-தன்மை, 'செந்நீர்ப் பசும்பொன்' ௬.
நீர்த்து - தன்மையையுடையது, 'இது நீர்த்தோ நினக்கெ' ௪௩.

## நு.

நுணங்கு - நுண்மை, 'நுணங்கு செந்நா வணங்க வேத்தி' உ௧௧.
நுணுகி-மெலிந்து, 'தோணுணுகி' ௬௬.
நுதல் - சென்னி, 'குடுமி களைந்த நுதல்' ௭௭. யானைமத்தகம், 'புகரணிநுதல்' ௩; 'பூநுதல் யானை' ௧உ.
நுதி-நுனி, 'நுதிமழுங்கிய வெண்கோடு' ௪; 'நுதிமுக மழுங்க' ௩௧.
நும்மோரன்ன-நும்மைப்போலும், 'நும்மோ ரன்ன வேந்தர்' ௪ரு; 'நும்மோரன்ன செம்மலு முடைத்தே' ௪௭.
நுவல - சொல்ல, 'ஈகை நுவல' உ௪.
நுவலும் - சொல்லும், 'அறத்தாறு நுவலும்' ௬.
நுழைகல்லா - நுழையாத, 'கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை' உ௧.
நுனை - நுனி, 'கூர்நுனை வேல்' ௪உ.

## நூ.

நூறி-அறைந்துகொண்டு, 'மூலைபொலியாக முருப்ப நூறி' உரு; வெட்டி, 'அருஞ்சமந் ததைய நூறி' ௬௩.

## நெ.

நெடியோன் - வடிம்பலம்பநின்றபாண்டியன், 'முந்நீர் விழவி னெடியோன்' ௯.

நெடுமாவளவன் - சோழன்குளமுற்றத்துத்துஞ்சியகிள்ளிவளவன், 'கொடிநுடங்கு யானை நெடுமா வளவன்' ௨௨௮.

நெடுமானஞ்சி - அதியமான்நெடுமானஞ்சி, 'நெடுமானஞ்சிநீ யருளன் மாறே' ௯௨; 'கடுமான் றோன்ற னெடுமானஞ்சி' ௨௦௬.

நெடுமொழி - வஞ்சினம், 'நெடுமொழி மன்னர்' ௫௪. வீரமேம்பட்டவார்த்தை, 'நெடுமொழி மறந்த சிறுபேராளர்' ௧௭௮.

நெடுவேளாதன் - ஒரு சிற்றரசன், 'நெடுவே ளாதன் போந்தை யன்ன' ௩௩௮.

நெய்தல - சாக்காட்டுப்பறை, 'ஓரி னெய்தல் கறங்க' ௧௯௪.

நெய்தலங்கானல் - இஃது இளஞ்சேட்சென்னியூர், 'நெய்தலங் கான னெடியோய்' ௧௦; இது நெய்தலங்காலையெனவும் வழங்கும்.

நெய்ம்மிதி - நெய்யால்மிதித்துத் திரட்டப்பட்ட கவளம், 'நெல்லுடைக் கவளமொடு நெய்ம்மிதி பெறாஅ' ௪௪.

நெருநை - நேற்று, 'நெருநைப் பகலிடங்கண்ணி' ௨௪௧.

நெளிமருங்கு - குழிந்த இடம், 'நில னெளி மருங்கின்' ௧௮.

நெளிய - வருந்த, 'பொய்யாச் செந்நா நெளிய வேத்தி' ௧௬௮.

நெறி - ஒழுக்கம், 'நாஅல்வேத நெறி திரியினும்' ௨; முடக்கம், 'நெறிகொள் வரிக்குடர்' ௧௬௦.

## நே.

நே - ஈரம், 'நேள நெஞ்சின்' ௩.

நேமி - சக்கரம், 'நேமி யுய்த்த' ௩.

## நை.

நைத்தல் - அழித்தல், 'நாடு நைத்தலின்' ௯௭.

நைவர - இரங்க, 'நல்கா மையி னைவரச் சாஅய்' ௧௪௬.

## நொ.

நொதுமலாளர் - குறளைகூறுவார், 'நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது' ௩௫.

## நோ.

நோக்கின்று - நோக்கியது, 'மறுமை நோக்கின்றோ வன்றே' ௧௪௧.

நோகு - நோவேன், 'நோகோ யானே' ௧௧௬, ௨௩௪.

நோன் - வலி, 'சாப நோன்ஞாண்' ௧௭; 'மதனுடை நோன்றாள்' ௭௫.

நோன்றல் - பொறுத்தல், 'தமர்தற் றப்பி னதுநோன் றல்லும்' ௧௫௭.

## ப.

பஃறுளி - வடிம்பலம்பநின்ற பாண்டியனாலுண்டாக்கப்பட்டதோராறு, 'முந்நீர் விழவி னெடியோன, நன்னீர்ப் பஃறுளி' ௯.

பகடு - ஏர், 'பகடு புறந்தருநர் பார மோம்பி' ௩௫ கடா, 'பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ' ௯௦ பரப்பு, 'பகட்டெழின் மார்பின்' ௧௩: 'ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பின்' ௧௫௨. வலி, 'கதிர்விடு நுண்பூ ணம்பகட்டு மார்பின்' ௮௮; 'அலர்பூந் தும்பை யம்பகட்டு மார்பின்' ௯௬.

பகல் - சூரியன், 'பகலிருளினும்' ௨. நடுவுநிலைமை, 'படுவ துண்டு பகலாற்றி' ௧௭ பகற்பொழுது, 'பகல்விளங் குதியால்' ௮. பகுத்தல், 'நெருநைப் பகலிடங் கண்ணி' ௨௪௧.

பகழி - அம்பு, 'விழுத்தொடைப் பகழி' ௧௫௨.

பகன்றை - பகன்றைப்பூ, 'பனித்துறைப் பகன்றை' ௨௩௫.

பச்சூன் - செவ்விததசை, 'பச்சூன் றின்று' ௨௫௮

பச்சை - தோல், 'பச்சை நல்யாழ்' ௧௬௪.

பசலை - பொன்னிறம், 'பாழூர் நெருஞ்சிப் பசலை வான்பூ' ௧௫௫.

பசும்பொன் - ஓட்டற்றபொன், 'பாணன் சூடிய பசும்பொற் றாமரை' ௧௪௧.

பஞ்சவர் - பாண்டியர், 'செருமாண் பஞ்சவ ரேறே' ௫௮.

பஞ்சி - பஞ்சு, 'பஞ்சி முன்றிற் சிற்றில்' ௧௧௭.

பஞிலம் - தொகுதி, 'பன்னூ றடுக்கிய வேறுபடு பஞிலம்' ௯௨,

பட்டமாறு - பட்டபடியால், 'பெருந்தகை விழுப்புண் பட்ட மாறே' ௯௩.

பட்டன்று - பட்டது, 'மைந்துபட் டன்றே' ௧௩; 'ஆங்குப் பட்டன் றவன் கைவண் மையே' ௧௩௪.

பட்டென - பட்டதாக, 'அறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டென' ௨௩.

படை - மொய்ப்ப, 'வண்டுபட மலர்ந்த' உச.
படப்பை - பக்கம், 'பாசவற் படப்பை' சு; 'பெரும்புனற் படப்பை' கஅ; 'தண்புனற் படப்பை' கசுசு. மனைப் பக்கம், 'வேனைக்கை விறலியர் படப் பைக் கொய்த வடகு' கச0.
படர் - நினைவாலுண்டாகிய நோய், 'அரும்படர் களைமே' கசரு.
படர்தி - போகின்றாய், 'அன்றோற் படர்தி யாயின்' சஅ.
படர்ந்து - நினைத்து, 'வள்ளியோர்ப் படர்ந்து' சஎ; 'நாறிருங் கூந்தற் கிழவனைப் படர்ந்தே' ககரு.
படாஅ - பட்டு, 'படாஅச் செலீயர்நின் பகைவர் மீனே' உச.
படியினை - படிவித்தனை, 'காப்புடைய கயம்படியினை' கரு.
படுக்கும் - உண்டாக்கும், 'சோறுபடுக் குந் தீயோடு' உ0.
படுத்த - வீழ்த்த, 'எறிந்துகளம் படுத்த வேந்தவான்' கக.
படுத்து - செய்து, 'இடர்ப்படுத் திரீஇய'

படுதல் - விளித்தல், 'படுமணி யிரட்டும்' ஙஉ.
படுபு - தோன்றுதல், 'படுபறி யலனே பல்கதிர்ச் செல்வன்' ருச.
படுமலை - ஒருவகைப்பாலைப்பண், 'படு மலை நின்ற பயங்கெழு சீறியாழ்' கருரு.
படை - ஆயுதம், 'எயிறு படையாக' ரு; 'ஒண்படைக் கடுந்தார்' கரு. குதி ரைக்கலம், 'பொலம்படைக் கலிமா' ககசு; 'ஒளிறுபடைப் புரவிய தே ரும்' கருரு. கொளுத்து, 'திண்படை கலங்கிச் சிதைதலுய்ந் தன்றோ நின் வேல்' உரு.
படைத்திசினோர் - படைத்தவர், 'உட ம்பு முயிரும் படைத்திசி னோரே' கஅ.
படைப்பு - செல்வம், 'வாழிய பெரும நின் வரம்பில் படைப்பே' உஉ.
படைமடம் - வீரரல்லாதார்மேலும் முதுகிட்டார்மேலும் புண்பட்டார்மே லும் மூத்தார் இளையார்மேலும் போர் செய்தற்குச்செல்லுதல், 'படைமடம் படாஅன்பிறர் படைமயக் குறினே' கசஉ.

பண்டை - முன், 'பண்டையிற் பெரி தே' க0.
பண்ண - ஏற்ப அமைக்க, 'புனைதேர் பண்ணவும்' கஉ.
பண்ணன் - சிறுகுடிகிழான்பண்ணன், 'கைவள் ளீகைப் பண்ணன் சிறுகுடி' எ0; 'யான்வாழு நாளும் பண்ணன் வாழிய' கஎரு. வல்லார்கிழான்பண் ணன், 'வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்' கஅக.
பணி - ஏவல், 'வேற்றரசு பணிதொட ங்குநின்' கஎ.
பணியியர் - தாழ்க, 'பணியிய ரத்தை நின் குடையே முனிவர் - முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே' சு.
பணை - குதிரைப்பந்தி, 'பணைமுனிந்து - காலியற் புரவி யாலு மாங்கண' கஎஅ. பெருமை, 'பணையெருத்தின்' கரு; 'பாவடிப் பணைத்தாள்' எஉ. மருத நிலம், 'பெருந்தண்பணை பாழாக' கசு. யானைக்கூடம், 'பணைநிலை மு னைஇக் - களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையும்' உரு.
பதத்தை - செவ்வியையுடையாய், 'இன் சொலெண் பதத்தை யாகுமதி' ச0.
பதம் - உணவு, 'பெருஞ்சோற்று மிகு பதம் வரையாது கொடுத்தோய்' உ; 'கொள்பத மொழிய' உரு. கால், 'எறிபதத்தா னிடங்காட்ட' ச. கா லம், 'எறிபதத்தான்' ச. செவ்வி, ச0; 'கொழுங்கொடி விளர்க்காய் கோட் பத மாக' கஉ0; 'பதனன்று புக்கு' கஉச. தாம், 'பெண்டிருந் தம்பதங் கொடுக்கும்' கருக.
பதலை - ஒருகணமாக்கிணையென்னும் பறை, 'நல்யா ழாகுளி பதலையொடு சுருக்கி' சுச; 'ஒருதலைப் பதலை தூ ங்க' க0ரு, 'பதலை யொருகண் பை யென வியக்குமின்' கருஉ.
பதுக்கை - கற்குவியல், 'அம்புவிட வீழ் ந்தோர் வம்பப் பதுக்கை' ரு. திட் டை, 'பாலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி' உகுச.
பயந்த - பூத்த, 'சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ் - நூற்றித ழலர்' உஎ.
பயம்-பயன், 'பயங்கெழு மாநிலம்' ருஅ.
பயம்பு - குழி, 'மாப்பயம்பின் பொறை போற்றாது' கஎ.

பயன் - பிரயோசனம், 'பயன்றிகழ் வைப்பின்' எ.

பயிர் - மிருகங்களுள் ஒன்றை மற்றொன்று அழைக்கும் ஓசைக்குறிப்பு, 'கடமா னல்லேறு மடமா ணருபிணை பயிரழைப்பின்' கருஎ.

பயிரும் - அழைக்கும், 'கவைன் - றய்த் தலை மந்தியைக் கையிடூஉப் பயிரும்' கருஅ.

பயிலுதல் - செறிதல், 'மரம்பயில் கடமிளா' உக.

பயிற்றி - பலகாற்கூறி, 'வேண்டுமொழி பயிற்றி' ௩௯.

பரக்கும் - பரவும், 'ஆனிற்பரக்கும் யானைய முன்பிற் - கானகம்' ரு.

பரணன் - ஒருபுலவர், 'பரணன் பாடினன் மற்கொல்' ௯௦.

பரதவர் - நுளையர், 'திண்டிமில் வன்பரதவர்' உ௪.

பரம் - பாரம், 'மிசைப்பரந் தோண்டாது' ௩௦.

பரல் - பருக்கைக்கல், 'பரலுடை மருங்கில்' உ௯௪.

பரி - கதி, 'அலங்குளைப் பரிஇ யிவுளி' ௪. குதிரைநடை, 'கதழ்பரிய கலிமாவும்' ருரு. செலவு, 'நிமிர்பரிய மாதாங்கவும்' க௪; 'வண்பரி நெடுந்தேர்' க௪௯.

பரிக்கும் - தாங்கும், 'மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்' எரு.

பரிசிலர் - இரந்துவந்தோர், 'பரிசிலர்க் கருங்கல நல்கவும்' க௪.

பரிசின்மாக்கள் - பரிசிலர், 'பரிசின் மாக்கட்கு வரிசையி னல்கி' ௯.

பரிதல் - ஓடுதல், 'பொலம்பைந்தார்கெடப்பரிதலின்' ௩எ.

பரிதி - வட்டம், 'பரிதி ஞாலத்து' க௭௪.

பரிந்து - துணிந்து, 'கால்பரிந்துருள' உஉ௩.

பரிப்பு - இயக்கம், 'அஞ்ஞா யிற்றுப் பரிப்பும்' ௩௦.

பரியல் - இரங்குதல், 'பரியல் வேண்டா' கஎ௨.

பரிவு - அன்பு, 'பரிவுதப வெடுக்கும் பிண்ட நச்சின்' க௮௪; இரக்கம், 'பற்று மாக்களிற் பரிவுமுந் துறுத்து'.

பருத்திப்பெண்டு - பருத்திநூற்கும் பெண்டு, 'பருத்திப் பெண்டின் பனுவலன்ன' க௨௫.

பல்லியாடிய - தாளியடிக்கப்பட்ட, 'பல்லி யாடிய பல்கிளைச் செவ்வி' க௨௦.

பலகை - கேடகம், 'இலங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகை' கரு.

பவர் - கொடி, 'உழிஞைப் பவரொடு மிடைந்து' எ௬.

பழனம் - பொய்கை, 'பழன வாளை' ௬௧. வயல், 'பழன மஞ்ஞை யுகுத்த பீலி' க௩.

பழி - குற்றம், 'பிறர்பழி கூறுவோர்' ௩. வசை, 'பழிதீ ராற்றல்' ௨௨௭.

பழிச்சி - வாழ்த்தி, 'நிற்பழிச்சிச்சேறும்' கக௩.

பழிதாரா - பழிக்கப்படாத, 'படைப் பழி தாரா மைந்தினை தூதலும்' கருஎ.

பழுமரம் - பழுத்தமரம், 'யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன' க௬௩.

பழுனி - முதிர்ந்து, 'பெருவளம் பழுனி' கக௩.

பள்ளி - சாலை, 'திணிமணற் புதுப்பூம் பள்ளி' ௩௩.

பற்றலியர் - பற்றுதொழிக, ௬.

பறந்தலை - பாசறை, 'களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை' ௬௪. பாழ், 'பூளை நீடிய வெருவரு பறந் தலை' உ௩. பாழ்பட்டவிடம், 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' உ௨ரு. பாழிடமாகியபுறங்காடு, 'கள்ளியம் பறந்தலை' உ௪௦. போர்க்களம், 'கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந் தலை' கக; 'களிற்றுக்கணம் பொருத கண்ணகன் பறந்தலை' ௩ரு; கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை' ௬௬.

பறம்பு - ஒருமலை; இது பாரியென்னும் வள்ளலுடையது, 'பறம்பு பாடின ரதுவே' க௦அ; 'அளிதோ தானே பாரியது பறம்பு' க௦௯; 'உடன்றனி ராயினும் பறம்புகொளற் கரிதே' கக௦; 'சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே' கக௩; 'பறம்பிற் கோமான் பாரியும்' கருஅ; 'பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்' க௭௬; 'பாரி பறம்பிற் பனிச்சுனை போல' ௩௩எ. பறம்புநாடு, பாரியென்பவனுடைய நாடு, 'மூந்நூ றூர்த்தே தண் பறம்பு நன்னாடு' கக௦; 'தேர்வண் பாரி தண் பறம்பு நாடே' க௪அ.

பறைந்தன - நீங்கின, 'களங்கொளக் கழல்பறைந்தன' ௪.

பனங்குடை - பனையோலையாற்செய்யப் படுமுண்கலம், 'இரும்பனங் குடையின் மிசையும்' கஎஎ.
பனிக்கும் - நடுங்கும், 'அரசு தலைபனிக்கு மாற்றலை' சஉ; 'மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளி' கசரு.
பனிச்சை - கழன்மணியினதுகனியாற் கூறுபடுத்துச் சுருட்டப்பட்டகூந்தல், 'கழற்கனி வகுத்த துணைச்சில் லோதிக் குறுந்தொடி மகளிர்' கூஎ.
பனுவல்-இசைப்பாட்டு, 'வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்ப' கங்ரு. கேள்வி, 'செவிமுதல் வித்திய பனுவல்' உங்எ. சுகிர்ந்தபஞ்சு, 'பருத்திப் பெண்டின் பனுவ லன்ன' கஉரு. பாட்டு, 'பாடின் பனுவற் பாணர்' கஉஎ.
பனைப்போழ் - பனந்தோடு, 'மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇ' உஉ.

## பா.

பா - பரப்பு, 'பாவடி' கரு; எஉ.
பாசவல் - செவ்வியவல், 'பாசவன் மொக்கி' சுங.
பாசறை - பாடிவீடு, 'பாசறை யல்லது நீயொல் லாயே' ஙக; 'இடங்கெட வீண்டிய வியன்கட் பாசறை' சுஉ.
பாசி=பிராசி - கிழக்கு, 'பாசிச் செல்லாது' உஉக.
பாடிற்று - கூறிற்று, 'அறம்பா டிற்றே' ஙச.
பாடினி - பாணிச்சி, 'பாடினி யணியாள்' உசஉ; விறலி, 'இழைபெற்ற பாடினிக்கு' கக.
பாடு - ஒலி, 'பாடிமிழ் பனிக்கடல்' சக. செவ்வி, 'பெரும்பாட் டீரத்து' கஉ0 முறைமை, 'பாடறிந் தொழுகும் பண்பி னோரே' ககஎ.
பாடுகம் - பாடுவேம், 'பாடுகம் வம்மினோ' ஙஉ.
பாடுநர் - புலவர், 'பாணர் பாடுநர் பரிசிலர்' கஙரு.
பாண்டியன்மறவன் - நாலைகிழவன்நாகன், 'திருவீழ் நுண்பூட் பாண்டியன் மறவன்' கஎக.
பாண்டில் - கிண்ணி, 'கழற்பாண்டில்' கஎ.
பாணி-ஓசை, 'ஈர்ந்தண் முழவின் பாணி ததும்ப' ககூச. தாளம், 'படுநிரை யின்சீர்ப் பாணி தூங்கும்' உ0க.

பரமுனூர்-இது சேரநாட்டிலுள்ள தோரூர்; உ0ங.
பாய்தல் - பரவுதல், 'தேம்பாய் புன்னை' உச.
பாயுந்து - பாயும், 'தெண்கடற் றிரைமிசைப்பாயுந்து' உச.
பார் - முரம்புநிலம், 'ஊர்நனி யிறந்த பார்முதிர் பறந்தலை' உசுரு; வண்டிப்பார், 'தால்பார் கோத்து' கஅரு; வலியநிலம், 'பாருடைத்த குண்டகழி' கச.
பார்வல் - பார்த்தல், 'பார்வலிருக்கை'

பாரம் - பரிக்கப்படுஞ்சுற்றம், 'பாரமுமிலமே' கசரு.
பாரி - ஒருவள்ளல், 'பாரிவேள்பாற்பாடினை செலினே' க0ரு; 'கடவன் பாரி கைவண் மையே' க0சு; 'பாரி பாரியென்றுபல வேத்தி' க0எ; பாரியும் பரிசில ரிரப்பின் வாரே னென்னான்' க0அ; 'பாரியது பறம்பே' க0கூ; 'யாமும் பாரியு முளமே' கக0; 'பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று' ககங; 'பாரிய தருமை யறியார்' ககசு; 'பறம்பிற் கோமான் பாரியும்' கருஅ; 'கைவண் பாரி' உ0உ; 'மலைகெழு மாவண் பாரி' உஙசு.
பாரிமகளிர், பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர' உ00; 'நெடுமாப் பாரி மகளிர்' உ0க; 'கைவண பாரி மகளி ரென்ற' உ0உ.
பால் - பக்கம், 'பானின்று' உஉ. விதி, 'பாறர வந்த பழவிறற் றாயம்' எரு; 'வாழியெற் புணர்ந்த பாலே' கஎசு.
பாவை - கண்மணிப்பாவை, 'புரப்போர் புன்கண் பாவை சோர' உஙரு.
பாறிய - துணியாகிய், 'பாறிய சிதாரேன்' கரு0.

## பி.

பிசிர் - இது பாண்டிநாட்டிலுள்ளதோரூர், 'இரும்பிசி ராந்தை யடியுறையெனினே' சுஎ; 'தென்னம் பொருப்பனன் னாட்டுள்ளும், பிசிரோனென்ப வெனுயிரோம்புநனே' உகரு.
பிசிராந்தை - ஒருபுலவர், 'இரும்பிசிராந்தை யடியுறை' சுஎ.
பிட்டன் - பிட்டங்கொற்றன், 'மலைகெழு நாடன் கூர்வேற் பிட்டன்' கஎ0;

'வன்புல நாடன் வயமான் பிட்டன்' கஎ௨.

பிடர் - கழுத்து, 'யானையிரும் பிடர்த் தலை யிருந்து' ௬.

பிடவூர் - சோழநாட்டிலுள்ள தோரூர், 'நெடுங்கை வேண்மா னருங்கடிப் பிடவூர்' ௬௯௫.

பிடி - கைக்நீட்டு=கைப்பிடி, 'தோல்கழியொடு பிடிசெறிப்பவும்' ௬௮.

பிண்டம் - எண்வகை யெச்சத்துளொன்று; மணைபோலப் பிறப்பது, 'உறுப்பில் பிண்டமும்' ௨௮.

பிணி - கட்டு, 'பிணியுறு முரசம்' ௨௫. நோய், 'பெண்டிரும் பிணியுடையீரும்' ௯.

பிணிக்கொண்ட - கட்டுதலைச்செய்த, 'கயிறுபிணிக் கொண்ட' ௬

பிணிமுகம் - மயில, முருகக கடவுள் ஏறும்யானையென்றுமாம், 'பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்' ௫௬.

பிணை - பெண்மான், 'பெருங்கண் மாப்பிணை' ௨.

பிழையாத - தவறாத, 'செங்தொடை பிழையா வன்க ணாடவர்' ௩.

பிற்றைநிலை - வழிபாட்டுநிலை, 'பிற்றை நிலை முனியாது கற்றனன்றே' ௧௮௩.

பிறக்கு - பிறப்பேன், 'மாறியான் பிறக்கே' எக. பின், 'நசைபிறக் கொழிய' க௫

பிறங்கிய - செறிந்த, 'மரம் பிறங்கிய நளிச்சிலம்பில்' ௧௩௬.

பிறங்குதல் - உயர்தல், 'பிறங்குநிலை மாடத் துறந்தை' ௬௯. மிகுதல், 'பிறங்குநீர்ச்சேர்ப்பினும்' ௪௯

பிறர் - பகைவர், 'பிற ரகன்றலை நாடே' எ; 'பிறரோம் புற்ற மன்னெயில்' ௫௦. வேற்றரசர், 'பிறர்மண் கொண்டு' க௨.

பின்றை - பின்பு, 'பாண்முற் றொழிந்த பின்றை' ௨௯.

## பீ.

பீடு - பெருமை, 'பீடுடைய வெறழ் முன்பின்' கஎ; 'பீடுகெழு வேந்தே' ௩௫; 'பீடுஞ் செம்மலு மறியார்' எ௬ வலி, 'வேந்துபீ டழுத்த வேந்துவேற் றானை' ௨௨௫.

பீரை - பீர்க்கு, 'பீரை நாறிய சுரையிவர் மருங்கின்' ககசு.

பீலி - மயிலின்றோகை, 'மஞ்ஞை யுகுத்த பீலி' க௩.

பீள் - சூல், 'கருந்தாள் போகி யொருங்குபீள் விரிந்து' க௨௦.

## பு.

புக்கில் - புகலிடம், 'துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கில்' ௨௨௧.

புகர் - யானைமத்தகத்துப்புள்ளி, 'புகரணிநுதல்' ௩.

புகர்க்கலை - புள்ளிமான்கலை, 'புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி' க௫௨.

புகல - விரும்ப, 'கிளைபுகலத் தலைக்கூடியாங்கு' கஎ.

புகலுதல - விரும்புதல், 'நெஞ்சுடைய புகனமறவரும்' ௫௫.

புகலும் - விரும்பும், 'போரெனிற் புகலும் புனைகழன் மறவர்' ௩௧.

புகவு - உணவு, 'அகநாட் டண்ணல் புகவே' ௨௪௩.

புகழ்-கீர்த்தி, 'சேண்விளங் கும்புகழ்' க௦.

புகழ்மேம்படுநன் - புகழை மேம்படுத்துமவன், ௫௮

புகார் - ஆற்றுமுகம், 'புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்' ௩௦

புடைபெயர்தல் - கீழ்மேலாதல், 'நிலம் புடை பெயர்வ தாயினும்' ௩௪.

புடையல் - மாலை, 'இரும்பனம்புடையல்' ௯௯.

புணர்தல் - பொருந்துதல், 'குரல்புணர் சீர்க் கொளைவல்பாண் மகனும்' கக.

புணரி - அலை, 'வெண்டலைப் புணரி' ௨; ௩௧

புணரியோர் - கூட்டினவர்கள், 'நீருநிலனும் புணரியோர்' க௮.

புத்தேள் - தெய்வம், 'புத்தே ளுலகத் தற்று' ௨௨.

புதல்வர் - பிள்ளைகள், 'பொன்போற் புதல்வர்' ௯; 'புன்றலைப் புதல்வர்' க௦

புதவு - கதவு, 'புனலம் புதவின்' ௨௪.

புதுவது - புதிது, 'புதுவதோ வன்றே' ௫௨; 'தொலைதலும் புதுவ தன்று' எ௬.

புயத்து - பிடுங்கி, 'புயத்தெறி கரும்பின்' ௨௮.

புரந்த - உண்டாக்கப்பட்ட, 'ஒள்ளழற் புரந்த தாமரை' கக; 'அழல்புரந்த வடந்தாமரை' ௨௯.

புரவலை - பாதுகாப்பாய், 'இரவலர் புரவலை நீயு மல்லை' கசுஉ.
புரவி - குதிரை, 'அலங்குளைப் புரவி' உ.
புரவு - அரசிறை, 'குடிபுர விரக்குங் கோலே னாகுக' எரு; விளைநிலம், 'புரவுத்தொடுத் துண்குவை யாயினும்' உசுo.
புரி - முறுக்கு, 'புரியடங்கு நரம்பின்' கஙரு.
புரிசை - மதில், 'ஏந்துகொடி யிறைப்புரிசை' கஎ; 'பல்படைப் புரிசை' உஉச.
புரிதல் - ஆராய்தல், அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து' ஙரு.
புரிந்து - விரும்பி, 'நயம்புரிந் துறையுநர்' கசரு.
புரை - குறறம், 'புரையி னற்பனுவல்' கரு; 'புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே' சஉ.
புரைமை - உயர்ச்சி, 'நீயளந் தறிதிநின் புரைமை' ஙசு; 'மன்பதை காக்குநின் புரைமை நோக்காது' உகo.
புல்லாற்றூர் - ஒரூர், உகங.
புல்லென் கண்ணர் - புற்கென்ற கண்ணர், எஅ.
புல்லென்சடை - புற்கென்ற சடை, உருஉ.
புல்லென்றனை - பொலிவழிந்தாய், 'புல்லென் றனையால் வளங்கெழு திருநகர்' உoங.
புலம் - அறிவு, 'புலவரை யிறந்த புகழ்சா லோன்றல்' உங. இடம், 'புலங்கெட விறுக்கும் வரம்பி லானை' கசு. திசை, 'தென்புல வாழ்நர்க்கு' க.
புலம்பு - தனிமை, 'புலம்புகொண் டுறையும்' கசஎ.
புலர்தல் - உலர்தல், 'புலர்சாந்தின்' ங.
புலவர் - அறிவுடையோர்' கஉ.
புலவு - புலால், 'புலவுநாற்றத்த பைந்தடி' கச.
புலவுதி - வெறுத்தி, 'புலவுதி மாதோ நீயே' உகங.
புலன் - அறிவு, 'புலனழுக் கற்ற வந்தணாளன்' கஉசு.
புலனுழுதுண்மார் - அறிவாலுழுதுண்ணுங்கற்றோர், 'புலனுழு துண்மார் புன்க ணஞ்சி' சசு.
புலிகடிமால் - இருங்கோவேள், 'ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்' உoக; உoஉ: ஒரு முனிவர் தவஞ்செய்து கொண்டிருக்கையில், புலியொன்று அவரைக்கொல்லவர, அவர் இவனை நோக்கி (ஹொய்ஸள) இப்புலியைக் கொல்லென்று கட்டளையிட, இவன் அதனைக்கொன்றமையின், இவனுக்கு இப்பெயர் வந்ததென்று பழையசிலாசாதன ஆராய்ச்சியையுடையோர் கூறுவர். இதன்விரிவை அவரிடம் கேட்டுணர்க.
புலைத்தி - புலைமகள், 'முருகுமெய்ப் பட்ட புலைத்தி போல' உருங.
புழல் - துளை, 'புழற்றலைப் புகர்க்கலையுருட்டி' கருஉ.
புழுக்கு - இறைச்சி, 'யாமைப் புழுக்கின்' உகஉ.
புழை - காட்டுவாயில், 'கவைமுள்ளிற் புழையடைப்பவும்' கூஅ.
புறகை - மிக்கநீரால் அடப்பட்ட உணவு, 'கொடுநீர்ப் புறகை நீத்தனம் வரற்கே' சுச.
புறக்கொடுத்து - முதுகிட்டு, 'புறக்கொடுத் திறத்தந்' அ.
புறங்காப்ப - பாதுகாப்ப, 'மெலிவில் செங்கோ னீபுறங் காப்ப' சஉ.
புறஞ்சிறை - வேலிப்புறம், 'புறஞ்சிறை மாக்கட்கு' உஅ.
புறத்தை - முதுகையுடையை, 'ஆவஞ் சேர்ந்த புறத்தை' கச.
புறந்தருநர் - பாதுகாப்பார், 'பகடு புறந்தருநர் பார மோம்பி' ஙரு.
புறந்தரும் - பாதுகாக்கும், 'அழல்புறந் தரூஉ மந்தண ரதுவே' கஉஉ.
புறப்புண் - மார்பில்தைத்துருவின புண், 'புறப்புண் ணாணி' சுரு.
புறம் - புறக்கொடை, 'துப்புறுவர் புறம்பெற் றிசினே'. கக.
புன்கண் - வறுமை, 'புன்கணஞ்சி' சசு.
புன்கம் - சோறு, 'பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி' ஙச; 'சாந்த விறகி னுவித்த புன்கம்' கசுஅ.
புனல் - நீர், 'தண்புனல் பரந்த பூசல்' எ; 'தண்பொருநைப் புனற்பாயும்' கக.
புனைதல் - அலங்கரித்தல், 'புனைதேர் பண்ணவும்' கஉ. அழகு செய்தல், 'பொன்னியற் புனைந்தோட்டியால்' கச. செய்தல், 'வரிமணற் புனைபாவைக்கு' கக.

## பூ.

பூ - புகர், 'பூநுத - லாடியல் யானை' ௧௫. பொலிவு, 'பூநிறக் கவசம்' ௧௩. மலர், 'குலவுச்சினைப் பூக்கொய்து' ௧௧. யானைநெற்றிப்பட்டம், 'பூநுத லியானை யொடு' ௧௨.

பூக்க - பொலிவதாக, 'பூக்கநின் வேலே' ௨௩.

பூங்குன்றம் - ஒருமலை, ௧௩௩.

பூசல் - ஆரவாரம், 'மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்' ௨௫; 'ஆசா கென்னும் பூசல் போல' ௨௬௬ ஓசை, 'தண்புனல் பரந்த பூசல்' ௭.

பூஞ்சாற்றூர் - இது சோழநாட்டுள்ளதோரூர்' ௧௬௬.

பூட்கை - மேற்கோள், 'அறத்தாறு நுவலும் பூட்கை' ௬ ; 'பூட்கை யில்லோன் யாக்கை போல' ௬௧.

பூட்டு - பிணிப்பு, 'கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட்டு' ௧௪௧.

பூவாவஞ்சி - கருவூர், 'பூவாவஞ்சியுந்தருகுவன்' ௩௨

பூழி - புழுதி, 'பூழி மயங்கப் பலவுழுது வித்தி' ௧௨௦; கடுங்கட் கேழ லுழுத பூழி' ௧௬௮.

## பெ.

பெட்டாங்கு - விரும்பியபடியே, 'பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி' ௧௧௩.

பெட்பு - பேணுதல், 'பெட்பின் றீதல் யாம்வேண டலமே' ௨௦௫.

பெண்-மனைவி, 'பெண்ணீற் றுற்றென' ௮௨.

பெண்டிர் - மகளிர், 'பெண்டிரும் பிணியுடை யீரும்' ௯.

பெண்ணை - பனை, 'செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்' ௯௧. ஓர் ஆறு, 'பெண்ணையம் படப்பை நாடுகிழ வோயே' ௧௨௬.

பெய்மார் - வார்க்கவேண்டி, 'பாணர் மண்டை நிறையப் பெய்மார்' ௧௧௫

பெயர்க - பெயர்வாறுக, 'நோயில ராகிப் பெயாகதி லம்ம' ௧௩.

பெயர்த்தும் - பின்னும், 'நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்-வெண்டலைப் புணரிக் குடகடற் குளிக்கும்' ௨.

பெயர்தல் - பிறழ்தல், 'நிலம்பெயரினு நின்சொற் பெயரல்' ௩.

பெயர்ப்பு - கிளர்ந்து, 'பெயர்ப்பு பொங்க' ௨௨.

பெயர்புறம் - சரிந்து மீளும் புறக்கொடை, 'வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்து' ௩௫.

பெயரல் - பிறழாதொழியல்வேண்டும், 'நிலம்பெயரினு நின்சொற் பெயரல்' ௩.

பெயரிய - பெயர்கூறிய, 'கோவெனப் பெயரிய காலை' ௧௫௨. பெயர்த்த, 'தோல்பெயரிய வெறுழ்முன்பின்' ௭.

பெயல் - மழை, 'உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே' ௩௫; 'காப்பெயற் கலித்த' ௧௨௦.

பெருங்காடு - பறங்காடு, 'பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட் டீமம்' ௨௪௬.

பெருங்குன்றூர் - ஓரூர், ௧௪௭, ௨௧௦, ௨௬௬, ௩௧௮.

பெருங்கோக்கிள்ளி - கோப்பெருஞ்சோழன், 'பெருங்கோக் கிள்ளி கேட்க' ௬௭.

பெரும்பிறிது - இறந்துபடுதல், 'பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇ' ௧௫௨.

பெரும்பேது - இறந்துபாடு, 'வெந்திறற் கூற்றம் பெரும்பே துறப்ப' ௨௩௮.

பெருமிதத்தை - செருக்கினையுடையையாயிராநின்றாய், 'நினதென விலைநீ பெருமிதத் தையே' ௧௨௨.

பெருமிதம் - மிக்கமனச்செருக்கு, 'பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ' ௯௦.

பெருவங்கியம் - ஒருவகைவாத்தியம்; இது யானையின் துதிக்கைபோலும் வடிவையுடையது, 'கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்' ௧௫௨.

பெற்றிசின் - பெற்றாள், 'சீருடைய விழைபெற் றிசினே' ௧௧. பெற்றான், 'வெள்ளி நாராற் பூப்பெற் றிசினே' ௧௧.

பெறலருங்குரைத்து - பெறுதற்கரிது, 'அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே' ௫.

## பே.

பேகன் - வையாவிக்கோப்பெரும்பேகன்; இவன் ஒருவள்ளல், 'கடாஅ

யானைக் கலிமான் பேகன்' ககக, 'கடாஅ யானைக் கழற்காற் பேகன்' ஙசஉ; 'கைவள் ளீகைக் கடுமான் பேக' கசரு; 'வயங்குபுகழ்ப் பேகன்' கசச; 'கடாஅ யானைக் கலிமான் பேக' கசரு, 'அடுபோர்ப் பேக' கசகூ; 'பெருங்க ணுடன் பேகனும்' கருஅ.

பேணி - பாதுகாத்து, 'பேணித், தென் புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்' கூ.

பேர் - தோற்றப்பொலிவு, 'பேருடைய விழுக்கழஞ்சின்' கக.

பேரையம - இஃது அரையமென்னும் நகரத்தின் ஒருபாகம், உ0உ.

பேழ்வாய் - பெரியவாய், 'பேழ்வா யுழுவை' கூரு; கருஉ.

பேறு - பெற்றபொருள், 'பேறியா தெ ன்னேன்' கருச.

## பை.

பைஞ்ஞிணம் - செவ்விமையுடையநிண ம், 'பைஞ்ஞிணம் பெருத்த பசுவெள் ளமலே' ககஎ.

பைதல - துன்பம், 'வெவ்வங் கரக்கும் பைதன் மாக்களொடு' சக.

பைதறுகாலே - பசுமையற்றகாலம், 'கோ டை நீடிய பைதறு காலே' கஙச.

பைந்தடி - செவ்வித்தசை, 'புலவுநாற் றத்த பைந்தடி' கச.

பையாப்பு - துன்பம், உஉக.

பையென்றன - ஒளிமழுங்கின, 'பாடுநர் கடும்பும் பையென் றனவே' உகூஅ.

பையென - மெல்ல, 'பையென, வெ ன்னே வினவுதி யாயின்' சுகூ.

## பொ.

பொகுவல் - ஒருபறவை, 'செவிசெஞ் சேவலும் பொகுவலும்' உகூஅ.

பொங்க - மேன்மேனிளர, 'கெய்மலி யாவுதி பொங்க' கரு.

பொடிந்த - வெறுத்த, 'பொடிந்தநின் செவ்வி காட்டெனா' கசு0.

பொத்திய - மூட்டிய, 'கானவர் பொத் திய ஞெலிதீ விளக்கத்து' உசஎ.

பொத்து - புரை, 'பொத்தி னண்பிற் பொத்தியொடு கெழீஇ' உகஉ.

பொதி - பட்டை, 'பைங்கழை பொதி களைந் தன்ன விளர்ப்பின்' உருகூ.

பொதியம் - பொதியின்மலே, 'பொதிய மும் போன்றே' உ; 'தென்னம் பொ ருப்பன்' கூகூ; 'கழுறொடி யாஅய் மழைதவழ் பொதியில்' கஉஅ; 'தென் னம் பொருப்பன்' உகரு.

பொதியில் - அம்பலம், 'பலிகண் மாறிய பாழ்படு பொதியில்' ருஉ.

பொது - மன்று, 'பொதுவிற் றூங்கும் விசியுறு தண்ணுமை' அகூ.

பொதுச்சொல் - பூமி பிறவேந்தருக்கும் பொதுவென்னுமவார்த்தை, 'போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅ ன்' அ.

பொதுமொழி-உறுதியில்லாதவார்த்தை, 'நொதும லாளா பொதுமொழி கொ ள்ளாது' ருரு. சிறப்பில்லாதமொழி, 'ஏதின் மாக்கள் பொதுமொழி கொ ள்ளாது' ருஅ.

பொர - மாறுபட, 'கண்பொர விளங்கு நின் விண்பொரு வியனகுடை' ருரு.

பொருத - பொரப்பட்ட, 'கறுழ்பொரு த செவ்வாயான்' ச.

பொருதல - முட்டுதல், 'விண்பொருபு கழ் விறல்வஞ்சி' கக.

பொருது - சண்டைசெய்து, 'ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தொழிய' உ.

பொருந்தி - அடைந்து, 'வந்தடி பொ ருந்தி' க0.

பொருந்தில் - ஓரூர், ருகூ

பொருநா - சண்டைசெய்வார், 'பொ ருநர்க் - கிருநிலத் தன்ன நோன்மை' கச. பகைவர், 'அருநரை யுருமிற் பொருநரைப் பொறா' ருஅ.

பொருநன் - அரசன், 'அறந்துஞ் சுறந் தைப் பொருநனை யிவனே' ருஅ; 'மன்பதை புரக்கு நன்னாட்டுப் பொ ருநன்' சுஅ. பொருவான், 'பொரு நனு மிளையன்' எஅ. வீரன், 'எம் முனூ முளனொரு பொருநன்' அஎ.

பொருநை - ஆனபொருநதமென்னும் ஆறு; இது கருவூரக்குச்சமீபத்திலோ டுவது, 'தண்பொருநைப் புனற்பா யும, விண்பொருபுகழ் விறல்வஞ்சி' கக; 'வஞ்சிப் புறமதி லலேக்குங், கல் லென பொருநை மணலினும்' கூஅஎ.

பொலம் - பொன், 'பொலம்பூந் தும் பை' உ; 'பொலங்குழை யுழிஞை' ரு0.

பொலிந்த - சிறந்த, 'தாழ்சடைப் பொ லிந்த வருந்தவத் தோரக்கே' க.

பொழிந்து - பொழிந்தேன், 'கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்' உ0கூ.

பொறி - இலக்கணம், 'பல்பொறிக் கொண்ட வேந்தெழி லகலம்' கருக. இலாஞ்சனை, 'கோண்மாக் குயின்ற சேண்விளங்கு தொடுபொறி' ருஅ. எந்திரம், 'இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய, பெருங்கல் லடாரும்' கூ. ஒளி, 'கண்பொறி போகிய' கருக. கொளுத்து, 'புலிநிறக் கவசம் பூம்பொறி சிதைய' கூ.

பொறுத்தல்-தாங்குதல், 'கொழுநிழ னெடுஞ்சினை வீழ்பொறுத் தாங்கு' ருஅ.

பொறை - சிறுகுவடு, 'அறையும் பொறையு மணந்த தலைய' கக அ.

பொறையன் - சேரன், 'களங்கொள் யானைக் கடுமான் பொறைய' ருகூ.

பொறையாறு - ஓரூர், கூகக.

பொன் - இரும்பு, 'பொன்னியற் புனைதோட்டி' கச, 'விளங்குபொன் னெறிந்த நலங்கிளர் பலகை' கரு; 'பொன்புனை திகிரி' உகூகூ.

## போ.

போகம் - நுகரும் இன்பம், 'போகம் வேண்டி' அ.

போகிய - ஒழிந்த, 'மலைத்தல் போகிய சிலைத்தா மாரப' க0 ஓங்கிய, 'கள்ளி போகிய களரியம் பறந்தலை' உகூஎ.

போந்தை - பனை, 'முழாவரைப் போந்தை' அரு.

போழ் - வார், 'போழ்தூண் சேசி' அஉ.

போழ்க - பிளக்கப்படுவதாக, 'போழ்கென் னுவே' கூஉ.

போற்றார் - பகைவர், 'போற்றார்ப் பொறுத்தலும்' உ.

போன்ம் - போலும், 'போன்மென விரும்பி' கக.

போன்றனை - ஒத்தனை, 'இலக்கம் போன்றனை' ச.

போன்று - ஒத்து, 'இமயமும் பொதியமும் போன்றே' உ.

## பௌ.

பௌவம் - கடல், 'தொன்றுமுதிர் பௌவம'ச; 'இமிழ்திரைப் பௌவம்'அஅ.

## ம.

மகளிர் - பெண்டிர், 'மகளிர் மலைத்த லல்லது' க0.

மகிழ்சிறந்து - உண்டு, 'தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந்து' உச.

மகிழ்ந்து - உண்டு, 'வாங்கமைப் பழுனிய தேறன் மகிழ்ந்து' கஉக.

மங்குல் - இருட்சி, 'மங்குன் மாப்புகை' க0கூ.

மங்கையர் - மகளிர், 'வாலிழை மடமங்கையர்' கக.

மஞ்ஞை - மயில், 'பழன மஞ்ஞை யுகுத்த பீலி' கூ; 'மஞ்ஞை - யொலி நெடும் பீலி' ரு0.

மட்டு - மது, 'வெப்புடைய மட்டுண்டு' உச. மதுவைக்கும்சாடி, 'மட்டுவாய் திறப்பவும்' ககூ.

மடங்க - இறைஞ்ச, 'இசைப்பாடுவோ ரெருத்த மடங்க' ச0.

மடம் - பேதைமை, 'வாலிழை மடமங்கையர்' கக. மென்மை, 'தெறிநடை மடப்பிணை' உக; 'மடத்தகை மாமயில' கசரு; 'மடப்பிடி' கருக.

மடல் - பனங்கருக்கு, 'ஒழிமடல் விறகிற் கழிமீன் சுட்டு' உக.

மடவர் - யாதும் அறிவில்லாதார், 'மடவர் மெல்லியர் செல்லினும்' க0சு.

மடவரல் - மடப்பம், 'மடவர லுண்கண் வாணுதல் விறலி' அகூ.

மடவோன் - அறிவிலலாதோன், 'உள்ள மெள்ளிய மடவோன்' எகூ.

மடிவிலை - சோம்புதலையுடையாயல்லை, 'ஒடியா முறையின் மடிவிலை யாகி' உக.

மடுப்ப - ஊட்ட, 'ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்சிறந்து' ருசு.

மடை - ஆணி, 'மடைகலங்கி நிலைதிரிந் தனவே' கூஎ. கொளுத்து, 'மடை செறி முன்கைக் கடகம்' கரு0.

மண - அணு, 'மண்டிணிந்த நிலனும்' உ.

மண்டி - மடுத்து, 'நுதிமுக மழுங்க மண்டி' கூக. மிக்குச்சென்று, 'கடற்படை குளிப்ப மண்டி' கூ.

மண்டிய - அடர்த்துச்செய்த, 'அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்' சூஉ.

மண்டிலம் - சூரியமண்டிலம் சந்திரமண்டிலம், 'யாங்கன மொத்தியோ வீங்குசெலன் மண்டிலம்' அ. பார்வட்டம, 'பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்' கூ0.

மண்டை - பாணர்கையிலுள்ள ஏற்கும் பாத்திரம், 'கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரென' க0ரு; 'பாணர் மண்டை நிறையப் பெய்மார்' ககரு; 'பருஉக்கண் மண்டையொடு' க௨ரு; 'ஏலாது கவிழ்ந்தவென் னிரவன் மண்டை' கஎக.

மண்ணி - முழுகி, 'பனிக்கய மண்ணி' எக.

மண்ணினை-மண்ணையுடையை, 'பகைவருணரா வருமண் ணினையே' உ0.

மண்ணுதல் - ஒப்பமிடுதல், 'மண்ணுறு மணி' கசஎ.

மணந்த-சேர்ந்த, 'அறையும் பொறையு மணந்த தலைய' கக௮.

மணி - நீலமணி, 'ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்' ரு0.

மதவலி - மிக்கவலி, 'மைந்துடை மல்லன் மதவலி முருக்கி' ௮0.

மதன் - மனவெழுச்சி, 'மண்டமர்ப் பரிக்கு மதனுடை நோன்றாள்' எரு. மிகுதி, 'மண்டமரட்ட மதனுடை நோன்றாள்' உகரு. வலி, 'மதனுடை முழவுத்தோ ளோச்சி' ருா.

மதி - சந்திரன், 'உவவுமதி' ரு.

மதுகை - வலி, 'மதுகை யின்றி' எச.

மதுரை - பாண்டியர்களின் நகரம், ருசு.

மம்மர் - மயக்கம், 'மம்மர் நெஞ்சத் தெம்ம னோர்க்கு' ருரு.

மயக்கி - கலந்து, 'பாற்பெய் புன்கந் தேனொடு மயக்கி' கூச.

மயங்கிய - கலந்த, 'தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து' கக.

மரபு - தன்மை, 'தெறலரு மரபினின் கிளையொடும் பொலிய' க௨சு. முறைமை, 'நண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாது' உரு; 'உறுமுறை மரபின்' கூ௮. மேம்பாடு, 'இசைமரபாக' உகஎ.

மரீஇய - மருவிய, 'பகைப்புல மரீஇய தகைப்பெருஞ் சிறப்பின்' சுச.

மரீஇயோர் - மருவியவர், 'மரீஇயோ ரறியாது மைந்துபட் டன்றே' கரு.

மருக - மரபினுள்ளாய், 'ஓடாப் பூட்கை யுரவோன் மருக' க௨சு.

மருகனை - மரபினுள்ளாய், 'பலவும் விடுத்தோன் மருகனை' சுசு.

மருங்கு -பக்கம், 'கவிழ்மணி மருங்கின்' ரு; 'கனையெரி யுரறிய மருங்கு நோக்கி' உரு.

மருங்குல் - வயிறு, 'பசிபடு மருங்குலை' உசு0.

மருட்கை - வியப்பு, 'நினைக்குங் காலை மருட்கை யுடைத்தே' உகஎ.

மருண்டு - பயந்து, 'புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி' சசு.

மருதம் - காலைப்பண், 'மாலை மருதம் பண்ணி' கசக.

மருந்து - பரிகாரம், 'மருந்தில் கூற்றத் தருந்தொழில்' ரு; 'மருந்தில் கணிச்சி' ச௨.

மருப்பு - கொம்பு, 'கொல்லேற்றின் மருப்புப்போன்றன' ச. யாழ்க்கோடு, 'நல்லிசை யாழ்மருப்பு' உச௨.

மருள் - எண்வகையெச்சத்துளொன்று; அது அறிவின்றிமயங்கியிருப்பது, 'மாவு மருளும்' உ௮. ஒப்பு, 'எரிமருளவிர்சடை' ருசு; 'மதிமருள் வெண்குடை' கஎச.

மருள - வியப்ப, 'தாள்படு செல்வங் காண்டொறு மருள' கசுக.

மரை - தாமரை, 'மரையிலை போலமாய்ந் திசினோர் பலரே' உஎ.

மல்லல் - வளம, 'மல்லன் மூதூர்' க௮.

மலங்கு - ஒருவகைமீன், 'மலங்குமிளிர் செறு' சுக.

மலர்தல் - பரத்தல், 'மலர்தா யத்து' கஎ.

மலைக்குநர் - மாறுபடுவோர், 'சிலைத்தா ரகல மலைக்குந ருளரெனின்' சுக.

மலைத்தல - மாறுபடுத்தல், 'மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப' க0.

மலைத்தனை-பொருதாய், 'மலைத்தனை யென்பது நாணுத்தக வுடைத்தே' ருசு.

மலைய - சூட, 'பாணர் தாமரை மலையவும்' க௨.

மலையன் - ஒருவள்ளல், 'காரி யூர்ந்து பேரமர்க் கடந்த, மாரி யீகை மறப்போர் மலையனும்' கரு௮; இவன், மலையமான் திருமுடிக்காரியென்றும் சொல்லப்படுவான்.

மழகளிறு - இளங்களிறு, 'மைந்துமலிந்த மழகளிறு' உ௨.

மழலை - இளஞ்சொல், 'புதல்வர்தம மழலை' கூ௨.

மழவர் - வீரர், 'மழவர் பெரும' கூ0.

மழித்தலை - மட்டையாகியதலை, 'கொய்ம்மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய' உ௫௧.

மழுங்க - தேய, 'நுதிமுக மழுங்க' ௬௪.

மழுங்கிய - தேய்ந்த, 'நுதிமழுங்கிய வெண்கோடு' ௪.

மள்ள - வீர, 'முழுஉ வள்ளூர முணக்கு மள்ள' உ௪௧.

மள்ளர் - வீரர், 'மள்ளர், மலைத்தல் போகிய சிலைத்தார் மார்ப' ௪௦; 'உடன்று மேல் வந்த வம்ப மள்ளரை' ௭௭.

மறம் - ஆண்மை, 'மறத்தகை மைந்தரொடு' ௬௯. வீரம், 'மறத்திற் கொல்களிறு' ௯; 'மறம்பாடிய பாடினி' ௧௧.

மறலி - கூற்றம், 'மறலியன்ன களிற்றுமிசை யோனே' ௧௩.

மறவை - மறத்தையுடையாய், 'மறவையாயிற் போரொடு திறத்தல்' ௬௪.

மறுகு - தெரு, 'தாதெரு மறுகு' உ௧௫.

மறுத்த - மறுத்தற்கு ஏதுவாகிய, 'மாமறுத்த மலர்மார்பின்' ௭.

மறை - வேதம், 'மறைநவி லந்தணர்' ௧; 'நான்மறை முனிவர்' ௬.

மறைக்கொண்ட - மறைத்தற்குக்கொண்ட, 'வெயின்மறைக் கொண்ட வுருகெழு சிறப்பின் - மாலை வெண்குடை' ௬௦.

மறைக்கொண்டன்றோ - மறைத்தற்குக் கொண்டதோ, 'வெண்குடை - வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே' ௬௫.

மன் - நிலைபேறு, 'மன்னுயிர்ப் பன்மையும்' ௧௯. மிகவும், 'சிறந்தன்று மன்னே' ௭௫.

மன்பதை - உயிர்ப்பன்மை, 'மன்பதை காக்குநின்புரைமை' உ௧௦.

மன்ற - தெளிவாக, 'கோற்றோர் மன்ற நின்பகைவர்' உ௬; 'வல்லை மன்ற நீநயந் தளித்தல்' ௫௯. நிச்சயமாக, 'சிறுவரை - சென்றுநின் றோர்க்குந் தோன்று மன்ற' ௧௧௪.

மன்றம் - பொதியில் = பொதுவிடம், 'இரத்தி நீடிய வகன்றலை மன்றம்' ௬௪; 'மன்றப் பலவின்' ௧௨௮. செண்டுவெளி, 'பேரிசை மூதூர் மன்றங் கண்டே' ௨௨௦.

மன்னுக - நிலைபெறுவாயாக, 'மன்னுக பெருமநீ நிலமிசை யானே' ௬.

## மா.

மா - எண்வகையெச்சத்து ளொன்று; அது விலங்குவடிவாகப் பிறப்பது, 'மாவு மருளு முளப்பட' உ௮. ஒரு மாவெண், 'மாநிறை வில்லதும் பன்னாட் காகும்' ௧௮௪. கருமை, 'மாக்கடல்' ௪; 'மாக்கழி மலர்ந்த நெய்தல்' ௪௮. குதிரை, 'மாவே, எறிபதத்தா னிடங்காட்ட' ௪; 'நிமிர்பரிய மாதாங்கவும்' ௧௪. திருமகள், 'மாமறுத்த மலர்மார்பின்' ௭. மாமைநிறம், 'அம்மா வரிவை' ௧௪௭.

மாகம் - ஆகாயம், 'மாக விசும்பு' ௩௫.

மாங்குடி - ஓரூர், உ௪.

மாங்குடிமருதன் - மாங்குடி மருதனார்; இவர் சங்கப்புலவருள் ஒருவர்; பத்துப்பாட்டுள் மதுரைக்காஞ்சி நூலாசிரியர் இவரே, 'ஓங்கிய சிறப்பி னுயர்ந்த கேள்வி, மாங்குடி மருதன் றலைவனாக, வுலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற், புலவர்பா டாது வரைக வென் னிலவரை' ௭உ.

மாட்சி - தன்மை, 'வினைமாட்சிய விரைபுரவி' ௧௬.

மாட்டிய - கொளுத்திய, 'பொறியறிந்து மாட்டிய' ௧௯.

மாதிரம்-திசை, 'மாதிரத் தீண்டிய' ௬௦.

மாமறுத்தமலர்மார்பு - திருமகள் பிறர் மார்பை மறுத்தற்கேதுவாகிய பரந்த மார்பு, ௭.

மாய்ந்திசினோர் - மாய்ந்தோர், 'மாய்ந்திசினோர் பலரே' உ௭.

மாய்ந்தென - மாய, 'தொல்லோர் மாய்ந்தெனத் துளங்கல்செல் லாது' ௫௮.

மாயா - மறவாத, 'மாயா வுள்ளமொடு' ௧௩௯.

மாரி - மழை, 'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்' ௩௫.

மால்பு - கண்ணேணி, 'மால்புடை நெடுவரை' ௧௦௫.

மாவன் - ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியனுடைய நண்பருளொருவன்; இவனுடைய ஊர் மையலென்பது, 'பொய்யா யாணர் மையற் கோமான், மாவனும்' ௭௧.

மாவிலங்கை - ஓய்மானல்லியக் கோடனூர், 'இழுமென வொலிக்கும் புனலம் புதவிற் பெருமா விலங்கைத்

தலைவன் சீறியா, மில்லோர் சொன்ம லே நல்லியக் கோடனை, யுடையை வாழியெற் புணர்ந்த பாலே' ககசு.

மாறன் - பாண்டியன், 'வேந்துமேம் பட்ட பூந்தார் மாற' ௫௫; 'கடுமான் மாற மறவா தீமே' கசுஅ.

மாறு - இறந்துபாடு, 'நகாலென வந்த மாறே' உ௫௬. ஏதுப்பொருள் படு வதோரிடைச்சொல், 'அனையை யாகன் மாறே' ௪. பரிசு=விதம், 'விளங்கக் கேட்ட மாறுகொல்' ௫௦.

மாஅருக்கம் - கொற்கையைச் சூழ்ந்த நாடென்பர்; இதுமாஅருகமெனவும் வழங்கும், ௬௭, ௬௬, கஉ௪, உஅ௦.

## மி.

மிச்சில் - ஒழிபொருள், 'கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்' உ௬.

மிசை-மேடு, 'அவலா கொன்றோ மிசையா கொன்றோ' கஅ௭. மேல், 'மறலி யன்ன களிற்றுமிசை யோனே' க௬.

மிசைவு - உணவு, 'அல்கு மிசைவாகும்' உ௬௪.

மிஞிறு - தேனீ, 'மிஞிறார்க்குங் கமழ்கடாம்' உஉ.

மிடறு - கழுத்து, 'கறைமிடறு' க.

மிதவை - கூழ், 'அம்புளிமிதவை' உக௫.

மிலைந்த - சூடிய, 'மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்' உ௪.

மிலைந்து - சூடி, 'உழிஞைப் பவரொடு மிலைந்து' ௭௬.

மிழலைக்கூற்றம் - இது வேள் எவ்வியினுடையது; கூற்றம் - நாட்டின் உட்பிரிவுக்கு ஓர்பெயர்; 'ஓம்பா வீகை மாவே ளெவ்வி, புனலம் புதவின் மிழலையொடு' உ௪.

மிளிர்தல் - பிறழ்தல், 'மலங்குமிளிர் செறு' ௬க; 'இருநில மிளிர்ந்திசினுஅங்கு' க௬௬.

மிளிர்ந்திட்ட - மறிக்கப்பட்ட, 'படை மிளிர்ந் திட்ட யாமையும்' ௪உ.

மிளிர - பிறழ, 'கொழுங்கிழங்கு மிளிரக் கிண்டி' க௬அ.

மிளை - காவற்காடு, 'கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை' உக; 'போரருங் கடிமிளை' கஅக.

## மீ.

மீக்கூற்றம் - புகழ், 'பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே' க௬௫.

மீமிசை - மேல், 'கொல்களிற்று மீமிசைக் கொடி' ௬.

மீளி - மறம், 'மீளி முன்பி னாளி' உ௦௭.

மீன் - நட்சத்திரம், 'பன்மீ னாப்பட் டிங்கள் போலவும்' க௬.

## மு.

முக்காவனாடு - ஓர்நாடு, அ௦.

முக்கி - உண்டு, 'பாசவன் முக்கி' ௬௬.

முகம் - இடம், 'இனிய செய்திநின் னார்வலர் முகத்தே' கஉ.

முகிழ்த்தல் - அரும்புதல்.

முகையலூர் - இது சோழநாட்டிலுள்ள தோரூர், கஅக, உ௬௫.

முசுறி - ஓரூர், 'முழங்கடன் முழவின் முசுறி யன்ன' ௬௪௬.

முட்டு - குறை, 'மூவேழ் துறையு முட்டின்று போகிய' க௬௬.

முடியர்-முடிப்பாராக, 'அருந்தொழின் முடியரோ திருந்துவேற் கொற்றன்' கஎக.

முண்டகம் - கடல்முள்ளி, 'முண்டகக் கோதை யொணபொடி மகளிர்' உ௪.

முணங்குநிமிர்தல்-மூரிநிமிர்தல், 'முணங்குநிமிர் வயமான' ௫உ.

முணங்குநிமிர்ந்து-மூரிநிமிர்ந்து, 'அணங்கருங் கடுந்திற லென்னை முணங்கு நிமிர்ந்து' எஅ.

முத்தி - முத்தங்கொண்டு, 'புதல்வர் பூங்கண் முத்தி' ௪க.

முதுகூற்றுக்கூற்றம் - இது பழையவேளிர்களுடையது, 'பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர், குப்பை நெல்லின் முத்தூறு தந்த' உ௪. இது முத்தூர்க்கூற்றமெனவும் வழங்கும்.

முதல் - இடம், 'சுர்முதல் சேர்ந்த சில்வளை விறலி' ௬௦.

முதற்று - முதலாகவுடையது, 'அறநெறி முதற்றே யரசின் கொற்றம்'

முதாரி - முதுமை, 'முதாரிப் பாண' க௬அ.

முதிர்ப்பு-முதிர்ந்து, 'சூன்முதிர்ப்பு' க௬க.

முதிரம் - ஒருமலை, 'அதிரா யாணர் முதிரத்துக் கிழவ, விவண்விளங்கு சிறப்பி னியறேர்க் குமண' க௫அ; 'நட்டோர் நட்ட நல்லிசைக் குமணன், மட்டார் மறுகின் முதிரத் தோனே'

௧௬௦; 'பழந்தூங்கு முதிரத்துக் கிழவன், திருந்துவேற் குமணன்' ௧௬௩.

முந்நீர் - கடல்; ஆற்றுநீரும் ஊற்றுநீரும் மழைநீருமுடையதென்பதுபொருள், 'முந்நீர் விழவி னெடியோன்' ௯; 'முந்நீர் வழங்கு நாவாய்' ௧௩.

முந்துறுத்து - முன்னிட்டுக்கொண்டு, 'பற்றா மாக்களிற் பரிவுமுந் துறுத்து' ௨௯.

முந்தை - முன்னே, 'முந்தை நிற்பின்' ௧௦.

முயங்கினேன் - புல்லினேன், 'முயங்கினே னல்லனோ யானே' ௧௯.

முரஞ்சியூர் - ஓரூர், ௨.

முரண் - மாறுபாடு, 'கடுமுரண் முதலை' ௩௭. வலி, 'முரணுடை யுள்ளம்' ௨௦௬.

முரணிய - மாறுபட்ட, 'நீமுரணிய நீரும்' ௨.

முருக்கி - கெடுத்து, 'தோள்வலி முருக்கி' ௧௮; 'மதவலி முருக்கி' ௮௦. முறித்து, 'காப்புடைய வெழுமுருக்கி' ௧௪.

முருகு - தெய்வம், 'முருகுமெய்ப் பட்ட புலைத்தி' ௨௫௯.

முழவு - தண்ணுமை, 'மண்கனை முழவின்' ௧௫. மத்தளம், 'விசிகூடு முழவின்' ௧௨௮.

முழுநெறி - புறவிதழொடிக்கப்பட்ட முழுப்பூ, 'கூம்பவிழ் முழுநெறி' ௧௧௬.

முள்ளூர் - ஓரூர், ௧௭௪.

முள்ளூர்மலை - மலையமான்திருமுடிக்காரியின்மலை, 'பயங்கெழு முள்ளூர் மீமிசைப், பட்ட மாரி யுறையினும்' ௧௨௩; 'பறையிசை யருவி முள்ளூர்ப் பொருந' ௧௨௬; 'எள்ளறு சிறப்பின் முள்ளூர் மீமிசை' ௧௭௪.

முளிதல - உலர்தல், 'முளிபுற்கானங் குழைப்ப' ௧௬௦.

முற்றி-முடித்து, 'வேள்வி முற்றி' ௧௫.

முற்றிய - முடித்த, 'பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே' ௨௧.

முற்றுக - சூழ்வதாக, 'பாண்முற் றுக நின் னுண்மகி ழிருக்கை' ௨௯.

முறை - அடைவு, 'முறைமுறை யாடுநர் கழியுமிவ் வுலகத்து' ௨௯. ஊழ், 'ஆருயிர் - முறைவழிப் படூஉ மென்பது' ௧௯௨. நீதி, 'முறைவேண்டு பொழுதில்' ௩௫.

முன்ப - வலியையுடையோய், 'செருச்செய் முன்ப' ௪௧.

முன்பு - முன்னிடம், 'முன்பு துரந்து' ௧௪. வலி, 'முன்பிற் - கானக நாடனை' ௫; 'கடுந்தார் முன்பு தலைக்கொண்மார்' ௧௫; 'மீளி முன்பி னாளி' ௨௦௭.

முன்றுறை - துறைமுன்னர், 'முன்றுறை நுண்பல மணலினும்' ௧௩௬.

முன்னம் - மனக்குறிப்பு, 'முன்ன முகத்தி னுணர்ந்து' ௩.

முன்னனை - முன்னேநிற்பை, 'தானை முன்னனை யெறூஅ' ௧௬௯.

முன்னீர்-நிலத்திற்குமுன்னாகியநீர், 'முன்னீர் விழவி னெடியோன்' ௯.

முன்னூர் - ஊர்முன், 'முன்னூர்ப் பழுனிய கோளியா லத்து' ௨௫௪.

முனித்தலை - குடுமித்தலை, 'முனித்தலைப் புதல்வர்' ௨௫௦.

முனிவர் - அந்தணர், 'நான்மறை முனிவர்' ௬.

முனிவிலை - வெறுப்பில்லாய், 'முனிவிலை.........நடத்திசீ'

முனிவு - வெறுப்பு, 'முனிவிலர்' ௧௮௨.

முனைஇ-வெறுத்து, 'பனைநிலை முனைஇ' ௨௩, 'அளையகமுனைஇ' ௫௨.

முனையின் - வெறுப்பின்; 'செஞ்ஞாயிற்று வெயின்முனையின்' ௨௪.

## மூ.

மூதாளர் - முதியோர்; 'நரைமூ தாளர்' ௫௨.

மூதிற்பெண்டிர் - முதிய மறக்குடியிற் பிறந்த பெண்டிர, 'மூதிற் பெண்டிர் கசிந்தழ நாண' ௧௯.

## மெ.

மெய் - அறிவு, 'மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்' ௨௫

மெய்புகுகருவி - கவசம், ௧௩.

மெய்ம்மறந்து - அறிவுமயங்கி, 'மெய்ம் மறந்து பட்ட வரையாப் பூசல்' ௨௫.

மெல்லிய-மென்மையையுடையன, 'மெல்லிய பெரும தாமே' ௧௪.

மெல்லியர் - அற்பகுணங்களையுடையர், வறுமையுற்றோர்; 'மடவர் மெல்லியர் செல்லினும்' ௧௦௬.

மென்புலம் - மருதமும்நெய்தலும், 'மென்புல வைப்பி னன்னாட்டுப் பொருந' ௪௨.

## மே.

மேக்தோன்றல் - மேம்பட்டதோன்றல், 'இசைமேக் தோன்றல்' ௧௫௧.
மேக்தோன்றிய - மேம்பட்ட, 'இசை மேக் தோன்றிய வண்மை' ௧௫௮
மேவலை - விரும்புதலுடையை, 'கொள் ளை மேவலை' ௭.

## மை.

மை - இருட்சி, 'மைபடுமருங்குல்' ௫0. செம்மறியாடு, 'மையூன் மொசித்த வொக்கலொடு' ௯௬.
மைந்து - மறம், 'மைந்துபட் டன்றே' ௧௯. வலி, 'காடல் சான்ற மைந்தி னோய்' ௧௫; 'மைந்துடைக் கழை தின் யானை' ௭௯.
மைம்மீன் - சனிமீன், 'மைம்மீன் புகை யினும்' ௧௧௭.
மையல் - பாண்டிநாட்டுள்ளதோரூர்; இது மாவனென்பவ னுடையது, 'பொய்யா யாணர் மையற் கோமான், மாவனும்' ௭௧.
மைவிடை - ஆட்டுக்கிடாய், 'மைவிடை வீழ்ப்பவும்' ௧௧௯. செம்மறிக் கிடா ய், 'மைவிடை வீழ்ப்ப' ௯௯.

## மொ.

மொசித்த - தின்ற, 'மையூன் மொசித்த' ௯௬.
மொய்ப்ப - செருங்க, 'வாளோர் மொ ய்ப்ப' ௧௯.
மொழி - வார்த்தை, 'பிறர்பழி கூறு வோர் மொழிதே றலையே' ௧0.
மொழிவல் - சொல்லுவேன், 'கின்னொ ன்று மொழிவல்' ௫.

## மோ.

மோசி - ஒருபுலவர்; இவர் உறையூர் ஏணிச்சேரி முடமோசியாரென்றும் சொல்லப்படுவோர், 'திருந்துமொழி, மோசி பாடிய வாயும்' ௧௫௮.
மோவாய் - தாடி, 'குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்' ௨௫௭.

## யா.

யா - யானை, 'யாபல கொல்லோ பெ ரும' ௧௫.
யாங்கனம் - எவ்வாறு, 'யாங்கன மொ த்தியோ வீங்குசெலன் மண்டிலம்' ௮; 'யாங்கன மொழிகோ வோங்கு வாட் கோதையை' ௬௧.
யாணர் - புதுவருவாய், 'யாணர் வைப்பி னன்னாட்டுப் பொருந' ௨.
யாணர்த்து - புதுவருவாயை யுடைத்து, 'பெருவிறல் யாணர்த் தாகி' ௬௨.
யாத்த - பிணித்த, 'யாத்த நண்பினன்' ௨௧௬.
யாமங்கொள்பவர் - இடையாமத்து ஊர் காப்பவர், 'யாமங் கொள்பவர் சுடர் நிழற் கதூஉம்' ௩௬.
யாமம் - இடையாமம், 'யாமத்துத் தனி மகன் வழங்காப் பணிமலர்க் காவின்' ௩௩.
யாமை - ஆமை, 'படைமிளிர்ந் திட்ட யாமையும்' ௬௨; 'அரிக்குட ரரியின் யாமை மிளிர' ௨௬௧.
யாய்-தாய், 'முதிர்வின ளியாயும்' ௧௫௧.
யாவணது - எவ்விடத்துள்ளது, 'இருள், யாவண தோநின் னிழல்வாழ் வோர் க்கே' ௧0௨.
யாவது-எங்ஙனமாவது, 'அமர்மிக வியா வது' ௯௨.
யாவிர் - எப்பெற்றிப்பட்டீர், 'யாவி ரா யினும்' ௮௮.
யான்கண்டனையர் - யான்கருதியவதனை யேகருதுவர், 'யான்கண் டனையரென் னிளையரும்' ௧௯௧.

## யூ.

யூபம் - யாகத்தூண், 'யூப நட்ட வியன் களம் பலகொல்' ௧௫; 'யூப நெடுந் தூண் வேத வேள்வி' ௨௨௪.

## வ.

வசை - பழி, 'வசையில் வாழ்க்கை' ௧0.
வஞ்சி - கருவூர், 'விண்பொருபுகழ் விற ல்வஞ்சி' ௧௧; 'பூவா வஞ்சியுந் தரு குவ னென்றே' ௩௨; 'வாடா வஞ்சி வாட்டுநின்' ௩௯; 'வஞ்சி முற்றம் வயக்கள னாக' ௩௭௩; 'வஞ்சிப் புற மதி லலைக்கும், கல்லென் பொருநை' ௩௮௭. பகைமேற்செலவு, 'பாடினி பாடும் வஞ்சிக்கு' ௧௫.
வட்கர் - கூறறம், 'வட்கர் போகிய வள ரிளம் போந்தை' ௧00.
வட்கார் - பகைவர், ௧00.
வட்டி - கடகம், 'மான்றசைச் சொரிந்த வட்டி' ௩௩.
வட்டித்து - சுழற்றி, 'மருந்தில் கணிச்சி வருந்தவட் டித்து' ௬௨.

வடமலை - இமயமலை, 'வடமலைப் பெயர் குவை யாயின்' சுஎ.

வடமீன் - அருந்ததி, 'வடமீன் புரையுங் கற்பின்' கஉஉ.

வடாஅது-வடக்கின்கண்ணது, 'வடாஅது பனிபடு நெடுவரை' சு.

வடி - திருத்தம், 'வாளுட்கும் வடிநீண் மதில்' கஅ. வடித்தல், 'வடிநவி னவியம்' உரு.

வடிந்த - அழகுபெற்ற, 'வடுவின்று வடிந்த யாக்கையன்' கஅo.

வடியா - திருந்தாத, 'வடியா நாவின்' சஎ.

வடு - தழும்பு, 'சாப நோன் ஞாண் வடுக்கொள வழங்கவும்' கச.

வண்ணம் - அழகியநிறம், 'வண்ணமார்ப்பு' க. நிறமுடையகலவை, 'வண்ண நீவிய' ருஉ.

வணர் - வளைவு, 'வணர்கோட்டுச் சீறியாழ்' கருரு.

வந்தனம் - வந்தேம், 'எய்தவந் தனம் யாம்' கo.

வந்திசின் - வந்தேன், 'காண்கு வந்திசிற் பெரும' கஎ. 'எந்தைநிற் காண்குவந் திசினே' கஉரு.

வம் - வா, 'நீயும் வம்மோ' கஅo.

வம்பலர் - வழிபோவார், 'வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்' உருo.

வம்பு - கச்சு, 'வம்பணி யானை' ருஎ. நிலையின்மை, 'எள்ளி வந்த வம்ப மள்ளா' எஅ; 'வம்ப மன்னரோ பலரே' எக. புதுமை, 'வம்பப் பதுக்கை' ரு.

வம்மின் - வாரீர், 'பாடுகம் வம்மினோ பரிசின் மாக்கள்' ருஉ.

வயம் - வலி, 'வயவேந்தன்' கக; 'வயமான் றோன்றல்' அச.

வயமான் - புலி, 'முணங்குநிமிர் வயமான்' ருஉ.

வயவர்-வீரர், 'திறனறி வயவரொடு' உo.

வயவு-வேட்கைநோய், 'வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது, பகைவ ருண்ணு வருமண் ணினையே' உo.

வயிரியர் - கூத்தர், 'பசும்பொன் வயிரியர்க் கீத்த' கூ; 'வயிரிய, ரின்மை தீர்க்குங் குடிப்பிறந் தோயே' ககூச.

வயின் - முறை, 'வயின்வயி, னுடன்று மேல் வந்த வம்ப மள்ளரை' எஎ.

வரம்பு - எல்லை, 'வரம்பி றானை' கசு,

வரால் - ஒருமீன், இது பெருத்தவடிவமுடையது, 'தண்ணுறைப் பருவரால்' கஅ.

வரி - எழுத்து, 'வல்லோன் றைஇய, வரிவனப புற்ற வல்லிப் பாவை' ருரு. ஒருவகைப்பொருள், 'வரிநவில் பனுவல்' கருரு. வண்டல், 'வரிமணற் புனை பாவைக்கு' கக.

வரிசை - சிறப்பு, 'ஆடுகொள் வரிசைக் கொப்ப' ருரு. தம்மைப் புரப்போரால்வருஞ்சிறப்பு, 'இவரிசைக்கு வருந்துமிப் பரிசில்வாழ்க்கை' சஎ. தரம், 'வரிசை யறியாக் கல்லென் சுற்றமொடு' கஅச; 'வருகென வேண்டும் வரிசை யோர்க்கே' உoஎ. மேம்பாடு, 'வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கைப், பரிசிலர்க்கு' உoசு.

வரிவயம் - புலி, 'வரிவயம் பொருத வயக்களிறு போல' கoo.

வருதி - வருவை, 'மாறி வருதி' அ.

வருநர் - விருந்தினர், 'வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை' கo.

வருவல் - வந்தேன்; காலமயக்கம், 'கண்டனென் வருவல்' உக.

வரை - எல்லை, 'புலவரை யிறந்த புகழ்சா றோன்றல்' உக; 'சிறுவரை சென்றுநின் றோர்க்கும்' ககச. மலை, 'பனிபடு நெடுவரை' சு.

வரைதி - கூறுபடுப்பை, 'பொழுதென வரைதி' அ.

வரைப்பு - எல்லை, 'நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம்' ரு.

வரையா - அளவில்லாத, 'மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்' உரு. மிகுதிகுறைபடாமல்வழங்கும், 'வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை' கo.

வரையாவீகை - எப்பொருளையும் எல்லார்க்கும் வரையாதுகொடுக்கும் வண்மை, 'வரையா வீகைக் குடவர் கோவே' கஎ.

வல் - சூதாடுகருவி, 'வல்லி னல்லகம்' ருஉ. வல்ல, 'கொளைவல் பாண்மகன்' கக. விரைவு, 'வழிபடு வோரை வல்லறி தீயே' கo; 'வல்லே நின்வயிற் கிளக்குவ மாயின்' கஉசு,

வல்சி-உணவு, 'துழந்த வல்சியின்' உகூ. வளைகதிர், 'வல்சி கொண்டளை மல்கவைக்கு, மெலிமுயன் றனையர்' ககo.

வல்லாங்கு - சதுரப்பாடு, 'வல்லாங்கு வாழ்தும்' கசுரு. வல்லபடி, 'வல்லாங்குப் பாடி' சஎ.

வல்லார் - ஓரூர், 'வலாஅ ரோனே வாய்வாட் பண்ணன்' கஅக. வல்லமையில்லாதவர், 'வல்லா ராயினும் வல்லுந ராயினும்' உஎ; ருஎ.

வல்லார்கண்ணி - கற்றப்பட்டகண்ணி, உருஉ.

வல்லாள - வலியவாண்மையையுடையோய், 'நள்ளா தார்மிடல் சாய்த்த வல் லாள' கஉரு.

வல்லாளனை - வலிய ஆண்மையையுடையை, 'அடிபொலியக் கழறைஇய வல்லாளனை' சo.

வல்லினும் - அறிவேனாயினும், 'வல்லினும் வல்லே னாயினும்' கசுக.

வல்லுநர்-வல்லமையையுடையவர், 'வல்லா ராயினும் வலலுந ராயினும், ஆங்கது, வல்லுநர் வாழ்ந்தோ ரென்ப' உச; உஎ; ருஎ.

வல்லேம் - வலலமை யில்லேம், 'வல்லே மல்லே மாயினும்' கஉசு.

வல்லை - வல்லமையுடையாய், 'அருள வல்லை யாகுமதி' உஎ; 'வல்லை மனற நீயயந் தளித்தல்' ருக.

வலக்கும் - சூழும், 'வயலுழை மருதின் வாங்குசினை வலக்கும்' ருஉ.

வலந்த - சூழ்ந்த, 'இழைவலந்த பஃறுன்னத்து' கருசு.

வலம் - வலி, 'தாள்வலம் வாழ்த்த' உச. வெற்றி,'வாள்,வலந்தர மறுப்பட்டன' ச; 'எழுவர் நல்வலங் கடந்தோய்' கக; 'ஏற்றுவல னுயரிய' ருசு; 'வலம்படு வாய்வாள்' கூக.

வலவன் - தேர்ப்பாகன், 'வலவ னேவா வான வூர்தி' உஎ.

வலித்த - கருதிச்செய்யப்பட்ட, 'தச்சன், றிங்கள் வலித்த காலன் னோனே' அஎ.

வலியுறுக்கும் - இறுகப்பிடிக்கும், 'வளன்வலி யுறுக்கு முளமி லாளரொடு' கசுo.

வலை - யாகபத்தினிகள் நெற்றியிலணிந்துகொள்ளுவது; இதனைச்சாலகமென்பர், 'அறம்புகழ்ந்த வலைசூடி' கசுசு.

வழங்க - அசைய, 'மழகளிறு, கந்து சேர்பு நிலைஇ வழங்க' உஉ. செலுத்த, 'சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்' கச.

வழங்கும் - இயங்கும், 'முந்நீர் வழங்கும் நாவாய்' கக.

வழாஅது-பிழையாமல், 'ஈண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅது' உரு.

வழி - வழிபாடு, 'வலியரென வழிமொழியலன்' உகக.

வழிநாள் - பின்வருநாள், 'வழிநாட் கிரங்குமென் னெஞ்சம்' கஎசு.

வழிபடுவோர் - வழிபட்டொழுகுவோர், 'வழிபடு வோரை வல்லறி தீயே' கo.

வழிமொழிந்து-வழிபாடுசொல்லி, 'வையங் காவலர் வழிமொழிந் தொழுக' அ.

வழிமொழிய - வழிபாடுகூற, 'தொன்று பட்டு வழிமொழிய' கஎ.

வழு - பாதகம், 'வழுவாய் மருங்கிற் கழுவாயு முள' கூச.

வழுதி - பாண்டியன, 'கருங்கை யொள்வாட் பெரும்பெயர் வழுதி' ரு; 'இனப்போர் வழுதி' ருக; 'தாடோய் தடக்கைத் தகைமாண் வழுதி' ருக.

வழை - சுரபுன்னை, 'வழையொடு நீடி' கருஅ.

வள்பு - வார், 'மாசற விசித்த வார்புறு வள்பின்' ருo.

வள்ளி - வளை, 'ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்' கருரு.

வள்ளியோர் - வண்மையையுடையோர், 'வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற போகி' சஎ.

வள்ளூரம் - தசை, 'முழூஉ வள்ளூர முணக்கு மள்ள' உசுக.

வளம் - செல்வம், 'வளங்கெழு வைப்பின்' எக.

வளவன் - சோழன், 'இயறேர் வளவ' எ; 'பெருவிறல் வளவன்' கஎச; 'திண்டேர் வளவற் கொண்ட கூற்றே' உஉரு.

வளி - காற்று, 'விசும்பு தைவரு வளியும்' உ; 'வளிவழங்கு திசையும்' உo; 'வளிமிகின் வலியு மில்லை' ருக.

வளைஇ-சூழ்ந்து, 'முழுவதும் வளைஇ' கஅ; 'வையகமுழுதுடன் வளைஇ' சுக.

வளைஇய - சூழப்பட்ட, 'இமிழ்கடல் வளைஇய வீண்டகன் கிடக்கை' கக.

வறம் - நீரில்லாமை, 'கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது' கருஎ. வற்கடம், 'பெருவறங் கூர்ந்த வேனிற் காலை' உஉச.

வறல் - சுள்ளி, 'வெண்கிடை யென் றூழ் வாடுவறல் போல' எரு.

வன்கண்மை - தறுகண்மை, 'வன்க ணு டவர்' கூ.

வன்புலம் - குறிஞ்சியும் முல்லையும், 'வன் புலக் கேளிர்க்கு' சஉ.

வனப்பு - அழகு, 'செவ்வா னத்து வன ப்புப் போன்றன' சு.

## வா.

வாக்க - வடிக்க, 'வாக்க வுக்க தேக்கட் டேறல்' கக௫.

வாக்கல் - வடிக்கப்பட்டசோறு, 'கவை க்கதிர் வரகி னவைப்புறு வாக்கல்' உக௫.

வாட்டாறு - ஓரூர், 'வளநீர் வாட்டாற் றெழினி யாதன்' ௯௬௩.

வாணிகம் - ஊதியம், 'வாணிகப் பரிசில னல்லேன்' உ0அ.

வாய் - இடம், 'வாய்கா வாது, பரந்து பட்ட வியன்பாசறை' உஉ. தாவி, 'வாய்ச்செலவிவுளியொடு' கக௭. மெ ய்ம்மை, 'முதுமுதல்வன் வாய்போ காது' க௬௬.

வாய்வாள் - தப்பாதவாள், 'வலம்படு வாய்வா ளேந்தி' ௬க; வாய்த்தவாள், 'வாய்வாள் வேந்தே' உ௬.

வாயில் - வழி, 'புகழ்குறை படூஉம் வா யில்' கக௬.

வாயில் விடாது - வாயில்காவலர்க்குச் சொல்லிவிடாமல், 'வாயில் விடாது கோயில் புக்கு' ௬௭.

வார்பு - வார்தல், 'வார்புறு வள்பு' ௫0.

வாரணம் - கோழி, 'கான வாரண மீ னுங் காடு' ௫உ.

வாரி - விளைவு, 'வாரி குன்றினும்' ௯௫.

வால் - தூய்மை, ''வால்வெள் ளேறு' க. 'வாலிழை மடமங்கையா' கக. வெண்மை, 'வாலிழை மங்கையர்' ௬.

வாலியோன் - பலராமன், 'வலியொத் தீயே வாலி யோனை' ௫௬.

வாலிழை - வெள்ளியமுத்தாரம், ௬.

வாழ்நர் - வாழ்வோர், 'தென்புல வாழ் நர்க்கு' கூ. 'வாளின் வாழ்நர்' உசு. 'நிலமிசை வாழ்நர்' சகூ.

வாழிய-வாழ்வானாக, 'எங்கோவாழிய' கூ.

வாள் - ஒளி, 'வாண்முகத் தெதிரே' ௬.

வாள்கதிர் - வாலிய ஒளி, 'வாள்கதிர்த் திருமணி' க௫0.

வானம் - மழை, 'வான நாண வரையா து சென்றோர்க், கானா தீயும்' அசு.

வானவரம்பன் - சேரன், 'வான வரம் பனை நீயோ' உ.

வானவன் - சேரன், 'சினமிகு தானை வானவன்' கஉ௬.

வானவூர்தி - விமானம், 'வலவ னேவா வான வூர்தி' உ௭.

## வி.

விசித்த - வலித்துக்கட்டிய, 'மாசற வி சித்த வார்புறு வள்பின்' ௫0.

விசிப்ப - விம்ம, 'விலாப்புடை மருங்கு விசிப்ப மாந்தி' ௬க.

விசும்பு - ஆகாயம், 'விசும்புதைவரு வளி யும்' உ; 'அகலிரு விசும்பி னும்' அ; 'கொல்களிற்று மீமிசைக் கொ டிவிசும்பு நிழற்றும்' கூ.

விசைப்ப - தள்ள, 'நறுநெய்க் கடலை விசைப்ப' கஉ0.

விடர் - குகை, 'பெருமலை விடரகத்து' ௯௭; மலைப்பிளப்பு, 'அருவிடர்ச் சிறு நெறி' க௯௫.

விடுத்தேன் - விடைகொண்டேன், 'விடு த்தேன் வாழிய குரிசில்' உக0.

விடுதும் - செலுத்தக்கடவேம், 'எம்மம்பு கடிவிடுதும்' கூ.

விடுநை - ஒழிவாய், 'அடுநை யாயினும் விடுநை யாயினும்' ௯௬.

விடை - ஆட்டுவிடை, 'விடையும் வீழ் மின்' உ௬உ.

விண் - ஆகாயம், 'விண்பொருபுகழ்' கக.

வித்தி - விதைத்து, 'வள்ளியோர் செவி முதல் வயங்குமொழி வித்தி' உ0௬.

விதிர்த்து - சிதறி, 'நெய்யுடை யடிசின் மெய்பட விதிர்த்து' க௮௮.

விதிர்ப்பு - நடுக்கம், 'என்போற் பெரு விதிர்ப் புறுக' உ௫௫.

விதுப்பு - நடுக்கம், 'விதுப்புற வறியா வேமக் காப்பினை' உ0; 'என்போற் பெருவிதுப் புறுக' ௫௯. விரைவு, 'விதுப்புறு விருப்பொடு' உக௯. இது விதிர்ப்பெனவும் வழங்கும்.

விம்மி - பொருமி, 'முலையக நனைப்ப விம்மி' கசு௯.

வியத்தொறும் - வியக்குந்தோறும், 'விய த்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே' உக௭.

